# குடில்
# பம்பு செட்டுகள்



**ஸ்ரீ ராமகிருஷ்ண இண்டஸ்ட்ரியல் இன்ஸ்டிடியூட்**
**(ஸ்ரீ ராமகிருஷ்ண குடில்)**
திருப்பராய்த்துறை P.O., திருச்சி Dt.
போன் : 35 தந்தி : உழைப்பு




"தமிழக அரசு விவசாய இலாகாவினரால் அங்கீகரிக்கப்பெற்று, சிபார்சும் செய்யப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்து யூனியன், கூட்டுறவு நில அடமான வங்கிகள் மூலம் அளிக்கப்படும் கடன் வசதிகளிலும், புதிதாக வந்துள்ள அக்ரோ இன்டஸ்ட்ரீஸ் கார்ப்பரேஷன் கடன்களிலும், குடில் பம்பு செட்டுகளுக்கு முதல் முக்கியத்துவம் அளிக்க அரசு சிபார்சு செய்திருக்கிறது."




கீலக ஆண்டு
பங்குனி மாதம்
மார்ச் 1969

ஆண்டு : 34 இதழ் : 3


| | | | |
|---|---|---|---|
| 1. | தலையங்கம் | — பத்திராதிபர் | 81 |
| 2. | DEAR READER | — M. S. Nadar | 81 |
| 3. | கதைவிடுகவிதை | — | 82 |
| 4. | ஜீவயோகம் | — | 82 |
| 5. | பாரதி பாராட்டிய மூவர் | — பண்டித வித்வான் தி. வே. கோபாலய்யர் | 83 |
| 6. | தஞ்சாவூர் நெல்லை ... | — | 87 |
| 7. | உமாரின் வினாக்கள் | — சாலை இளந்திரையன் | 89 |
| 8. | நசிகேதன் | — அம்ருத, ஏ. எஸ். ராகவன் | 93 |
| 9. | காந்தியும் மாணவர்களும் | — | 96 |
| 10. | வி. கிருஷ்ணசாமி அய்யர் | — கி. சந்திர சேகரன் | 99 |
| 11. | என் தந்தை | — ந. சகுந்தலா பாரதி | 102 |
| 12. | கிழட்டு சமையற்காரன் | — காசிம் சுல்தான் | 107 |
| 13. | சீர்திருத்தம் | — கவிதை | 110 |
| 14. | MAN AND BEAST | — K. Natarajan | 111 |
| 15. | PROSE PETALS | — Amaryllis | 112 |
| 16. | குருவிக்கூடு | — திருலோக சீதாராம் | 114 |
| 17. | THE PALLET OF PHEASANTS | — T. N. Ramachandran | 114 |
| 18. | இளவேனில் | — கவிதை | 118 |




ஆண்டுக் கட்டணம் ரூ. 10

அலுவலகம் : 2-A, கோட்டை ஸ்டேஷன் ரோடு, திருச்சி-2. (தொலைபேசி : 4848)

மேல் அட்டை : டாக்டர் S. ராதாகிருஷ்னன்




மாதவம் சிறந்து சிவாஜி மானிடம் உயர்க.

# மாணவர் பண்பு

குடந்தையில் மாணவர்கள் முயன்று கோயில் ரதத்தைச் செப்பனிட்டுத் திருப்பணி செய்கிறார்கள். சென்னையில் மாணவர்கள் சேர்ந்து அழகான பத்திரிகை நடத்துகிறார்கள். கல்விப் பயிற்சியை மறந்து அரசியல்கிளர்ச்சிகளிலும் கலவரங்களிலும் மாணவர்களைத் திசை திருப்பி வருகின்ற இந்தநாளில், மாணவர்கள் நற்பண்புடையவர்களாகவே இருக்கிறார்கள் என்று நமக்குக் கிடைக்கும் நல்ல செய்தி ஆறுதலாக இருக்கிறது. எதிர்காலப் பிரஜைகள் எப்படியும் பிழைத்துக் கொள்வார்கள் என்பதற்கு நல்ல சான்று கிடைத்திருக்கிறது. நல்ல வழியில் பிள்ளைகளுக்கு ஊக்கம் தரவேண்டியது நம் கடமை.

# இந்த இதழ்

மகாகவி பாரதியாரின் இரண்டாவது புதல்வி சகுந்தலா பாரதி என் தந்தையார் என்ற தலைப்பில் தொடர்ந்து எழுதத் தொடங்கியிருக்கிறார். விடுதலைப் போராட்ட காலத்தில் தேசீயப் பண்பை வளர்த்த உயர்நீதிபதி வி. கிருஷ்ணசாமி அய்யரைப்பற்றி அவரது குமாரர் கி. சந்திரசேகரன் எழுதிய அரிய குணசித்திரம் இந்த இதழில் வந்திருக்கிறது.

ஆங்கிலப் பகுதியை வரவேற்றுள்ள நண்பர்களுக்கு நன்றி. குருவிக் கூடு ஆங்கிலப் பெயர்ப்பின்மூலம் தமிழ்க்கவிதையை ருஷ்ய அன்பர் ஒருவர் அனுபவிப்பதாகத் தகவல் கிடைத்திருக்கிறது. அன்பர்கள் மேலும் சந்தாதார்களைச் சேர்த்துக்கொடுத்து உதவ வேண்டுகிறோம்.



# Dear Reader

Brunei forests seem an exotic setting for a South Indian gentleman. K. Natarajan spent the best years of his life in North Borneo as an Engineer. This Jim Corbett of Borneo lights up the forest dim with his intutive understanding of the animal soul.

The second 'Prose Petal' gently floats down our pages from the facile fingers of Amaryllis.

'The Pallet of Pheasants' has evoked many enthusiastic approvals from discerning readers. It is pleasant to know that a reader in Soviet Union eagerly follows the English rendering of Poet Trilokasitaram's 'Kuruvikkoodu'

# கதைவிடுகவிதை

பேய்க் காட்டுச் சித்தர் கூறப்
பனங்காட்டு நம்பி ஓலைப்படுத்தியது

[ விடை அடுத்த இதழில் ]

## 1. என்ன உறவு ?

என்மருங் குற்றுர் தந்தை
என்தந்தை மைந்தன் ஆனல்

என்னுடன் பிறந்தார் இல்லை
எனக்கொரு மகனும் இல்லை

கற்றவர் ஆய்ந்து கண்டு
கணக்கிதைச் சரியாய்ப் போட்டு

உற்றவர் அடியனேற்கு எவ்
உறன்முறை உடனே, சொல்வீர்.

## 2. லாப நஷ்டம்

வராக னுேர் ஆறுபத்தில்
வாங்கிய பொருளை விற்றுப்

பெருகிய ஏழு பத்தைப்
பெட்டியில் பூட்டி வைத்தேன்

மறித்தொரு பத்துக் கூட்டி
மற்றும்அப் பொருளே வாங்கி

குறிப்புடன் தொண்ணூற் றுக்குக்
கொள்பவர் தமக்கு விற்றேன்

வாணிபம் செய்து பெற்ற
வகைதெரிந் துரைசெய் வீரேல்

ஆண்பிள்ளை நீர்தான் ஆனல்
அரைநொடிக் குள்சொல் வீரா?

## 3. எது அதிகம்

அரைப்பவுன் நிறைத்த பெட்டி
அன்புடன் அனுஜன் கொள்ள

அரைப்பெட்டி முழுப் பொன்னுக
அண்ணனும் எடுத்துக் கொண்டான்

பெட்டியில் பேத மில்லை
பெருநிதி பெற்றுர் யாரே

அட்டியில் லாமல் சொன்னல்
அறிவாளி நீர்தான் அய்யா.

## 4. ஜோடி சேர்க்க

கருப்புடன் பழுப்பு வண்ணக்
காலணி ஆறு ஜோடி

இருப்பது இருட்ட றைக்குள்
எனக்கொரு ஜோடி வேண்டும்

இடம் வலம் என்பவற்றை
இருட்டினில் தடவிப் பார்த்து

எடுத்துடன் வெளியே வந்தால்
இயல்புடன் அமைய வேண்டும்

எத்துணை ஒற்றை வீதம்
எடுத்திட வேண்டு மென்று

இத்ததி உரைப்பீ ராகில்
இணையுமக் கில்லை தானே.

## ஜீவ யோகம்

பேசிப் பேசிப் பெரும்பொழு துருட்டிப்
பேச்சறு மோனப் பெருநிலை தழீஇப்பின்

பேசிப் பேசிப் பேதம் பெருக்கிப்
பேச்சறு பிணக்கிற் பேதைமை யாமோ ?

நன்றும் தீதும் கடைந்தது நட்பு
நலிவைத் தாங்கி நயப்பது கற்பு

ஒன்றுற அறிதல் உறவே யாகும்
ஒன்றே யாகி இயங்குதல் யோகம்

தொடர் : 3



# பாரதி பாராட்டிய மூவர்

— பண்டித வித்வான் தி. வே. கோபாலய்யர்

ஒரு நாட்டின் செல்வங்கள் குழந்தைகளே என்ற உயரியஎண்ணம் வள்ளுவர் உள்ளத்தே நிலைபெறுவதாயிற்று. ஆதலின் பால்வேறுபாடு கருதாது.

பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த
மக்கட் பேறல்ல பிற

என மக்கட்பேற்றை மேம்பட்ட செல்வமாகக் குறிப்பிடுகிறார்.

உயிரினம் பசியால் வாடுதல் கூடாது என்ற உயரிய கருத்தில்,

'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை'

என்ற அறத்தை வெளியிடுகிறார்.

தமிழ்நாட்டில் மூவேந்தரும் குறுநில மன்னர்களும் மனவேறுபாடுகொண்டுபொருது தாமும் வருந்திக் குடிமக்களையும் வருத்திய அக்காலத்தில் உலகப் பொது நூல் எழுதி அதன்மூலம் மன்னர்கள் மக்கள் ஆகியோர் உள்ளத்தில் ஒருமைப்பாட்டை வளர்க்கப் பாடுபடுகிறார்.

ஒருவன் ஒருத்தியையே மணந்து வாழ்தல் வேண்டும் என்ற கருத்தை மனைவியைக் குறிக்கவரும் இடங்களிலெல்லாம் மனைவியர் என்ற பன்மைப்பொருள் அமையப்பாடாது, இல்லவள், பிறன் பொருளாள், வளத்தக்காள் என ஒருமையிலேயேகூறி வலியுறுத்துகிறார்.

கல்வியை அரசியலில் கூறியபோதும், 'கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு புண்ணுடையர் கல்லாதவர்' 'விலங்கொடு மக்களனையர் இலங்கு நூல் கற்றாரோடேனையவர்' என்றாற்போல இருபாலார்க்கும் பொதுவான இன்றியமையாத பொருளாக அறிவுறுத்துகிறார்.

உலக இயக்கத்திற்கு அன்பே காரணம் என்பதை

'அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு'

எனவும்

அன்பீனும் ஆர்வ முடைமை அதுவீனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு

எனவும் கூறி வலியுறுத்துகிறார்.

வேற்றுமை தெரிந்த நான்கு சாதிகளும் நடையாடத் தொடங்கிய சங்க காலத்தில்

'பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பு ஒவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்'

எனத் தொழில் சிறப்புப்பற்றியே உயர்வு தாழ்வுகளைக் கற்பிக்கிறார்.

தொழில்களுள்ளும் கல்விச் சிறப்பு எய்துதலே தலையாயது என்பதை

'மேற் பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப் பிறந்தும்
கற்றார் அனைத்திலர் பாடு'

என்பதன்மூலம் விளக்குகிறார். ஒருவன் பெருமை பெறுதலும் சிறுமையுறுதலும் சாதியானன்று தன்தொழிலினாலேயே என்பதை

'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்'

என்பதனால் தெரிவித்து

பிறப்பினால் எவர்க்கும் பெருமை வாராதப்பா
சிறப்பு வேண்டுமெனின் நல்லசெய்கை வேண்டுமப்பா

என்று குறிப்பிடுகிறார்.

கல்வியறிவினும் ஒழுக்க நலனே மேம்பட்டது என்பதை

மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்

என்பதனால் தெரிவிக்கின்றார்.

பிறருடைய நலன் கருதி வாழும் அரசன் முதலில் தன்னிடம் குற்றம் வாராமல் தன்னைக் காத்துக்கொள்ளல்வேண்டும். பிறகே குடி மக்களின் குற்றங்களை ஆராய்ந்து அரசியல் நடத்துதல்வேண்டும் என்ற செய்திகளை

செருக்கும் சினமும் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து
இவறலும் மாண்பிறந்த மானமும் மாணு
உவகையும் ஏதம் இறைக்கு
தன் குற்றம் நீக்கிப் பிறர் குற்றம் காண்கிற்பின்
என் குற்றமாகும் இறைக்கு
ஓர்ந்து உண்ணேடாது இறை புரிந்து யார் மாட்டும்
தேர்ந்து செய்வஃதே முறை

என்ற குறட்பாக்களால் தெளிவுறுத்துகிறார்.

இவ்வாறு சங்க காலத்தில் புரட்சி மனப் பான்மைகொண்டு உலக நலன் கருதித் தெய்வ வழிபாட்டில் ஒருமைகண்டு கல்விச் சிறப்பை எடுத்தோதி, அதனினும் ஒழுக்கத்திற்கு உயரிடம் கொடுத்து, ஒழுக்கச் சிதைவான பரத்தையர் தொடர்பு, கட்குடித்தல், சூதாடல் முதலியவற்றைக்கடிந்து, சாதிபற்றிய வேறு பாட்டைக்களைந்து தொழிற் சிறப்பிற்கே உயர் வளித்து மக்களே நாட்டின் செல்வங்கள் என்பதை வலியுறுத்தி, அரசனுடைய பொறுப் புக்களை விளக்கிச் சொல்லும் வள்ளுவர் பாரதி யின் உள்ளத்தில் இடம் பெற்றதில் வியப் பில்லை.

ஆனால், வள்ளுவர் காலத்தில் நாட்டுப் பற்று, மொழிப்பற்று இவற்றைப் பேசவேண் டிய வாய்ப்பு ஏற்படவில்லை. தனிப்பட்டமுறை யில் கட்டாயக்கல்வியையும் பெண் கல்வியை யும் நாட்டிற்கு வலியுறுத்தாமையாலும், ஒருவன் ஒருத்தியையே மணத்தல்வேண்டும் என்று ஆணையிடாததாலும், அரசன் குடி மக்களுக்காகவே வாழும் ஒருகுடிமகன் என்ற கருத்தை வெளியிடாததாலும், பெண்ணைப் பிறன் பொருளாள் என்று குறிப்பிட்டதாலும், பெண்வழிச்சேரல் கூடாது என்றதனாலும், ஏனைய பல உயரிய கருத்துக்களையும் வழங்கிய வள்ளுவனார் பாரதியாரின் உள்ளத்தில் இரண் டாம் இடமே பெற்றார் என்பது உய்த்துணரத் தக்கது.

வள்ளுவர் உலகக்கவிஞராக விளங்கிய தால் நாட்டிடை ஒற்றுமை, நாட்டுப்பற்று, தாய்மொழிப்பற்று முதலிய செய்திகளைத் தம் நூலில் குறிப்பிடும் வாய்ப்பினைப்பெற்றார் அல்லர் என்பதும் உளங்கொளத்தக்கது.

இனி, இளங்கோவடிகள்பற்றி நோக்கு வோம்.

பெண்ணினம் முன்னேறல்வேண்டும் என்ற பெருநோக்கம்கொண்டவன் பாரதி. ஆண்களைப்போலவே பெண்களுக்கும் தனி எண்ணமும் தனித்தகுதியும் உண்டு என்பதை வலியுறுத்தியவன் பாரதி. வள்ளுவனார் அந் நிலையில் பின்தங்கியவர் ஆவர். பெண்ணைப் பிறன் பொருளாள் எனவும், பெண்வழிச்சேறல் கீழ்மை எனவும் வற்புறுத்திச்சென்ற வள்ளுவர் காலத்தை ஒட்டித் தோன்றியவர் இளங்கோ வடிகள்.

சங்க காலம் தமிழ் மக்களின் பொற்காலம் எனினும் அக்காலத்தில் மகளிர் கல்வியும் உரிமையும் நிரம்பியவராக இல்லை என்பதே உண்மையான கூற்று. புலவன், கவிஞன் என்ற சொற்களுக்கு ஏற்ற பெண்பாற்சொல் தமிழில் இன்மையே இக்கருத்தை வலியுறுத்தும். பெண்ணினத்தின் தொழில் கணவர்க்குக் குற்றேவல் செய்தலே என்ற செய்தி

'வழிபடுகிழமை அலட்டு இயலான'

என்ற தொல்காப்பியப் பகுதியால் புலனாகிறது.

மேலும் பெண்ணினத்தைக் குழந்தை நிலை யிலும் ஒருபடி குறைவாகவே இலக்கியம் கடைக்கணித்துள்ளது. பொதுவாகக் குழந் தைகளைக் குறிக்கும் இடங்களில் எல்லாம் புதல்வர் என்ற ஆண்மக்கள் பெயரே காணக் கிடக்கிறது.

'மையல் கொண்ட ஏமமில் இருக்கையர்
புதல்வர்க்குப் பூங்கண் முத்தி' —புறம்

தந்தையர்க்கு அருள் வந்தன வால்
புதல்வர்தம் மழலை —புறம்

தென்புலவாழ்நருக்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர்ப்பெருஅதீரும் —புறம்

யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வன் —அகம்

சிறுவர்ப் பயந்த செம்மலோர் —அகம்

செவிலி கை என் சிறுவனை நோக்கி —அகம்

புதல்வர்ப் பயந்த புனிறு தீர
வளமனை மகளிர் குளநீர் அயர—மதுரைக்காஞ்சி

கிளர்பூண் புதல்வரொடு கிலுகிலி ஆடும் —சிறுபாண்

அடைமறை ஆயிதழ்ப் போதுபோல் கொண்ட
குடை நிழல் தோன்றும் என் சிறுவன் —கலி

புதல்வன் தாய் அவன்புறங்
கவையினனே —ஐங்குறுநூறு.

இளந்துணைப் புதல்வரின்
முதியர்ப் பேணி —பதிற்றுப் பத்து

அம்மட்டோடு அமையாமல், ஆடவர் பெயரைச் சுட்டிப்பாடல்கள் பல பாடப்பட்டபோதிலும், பெண் மக்களுள் ஒருத்தி பெயராலும் தனியாக ஒரு பாடல்கூடப் பாடப்பெருத காலம் சங்க காலம். அரசனைப்பற்றிப் பல அடிகள் பாடப்படும் பாடல்களில், அரசியின் தொடர்பு வந்தும் அவள் இயற்பெயர் இடம் பெற்றிலது.

செயிர்தீர் கற்பின் சேயிழை —புறம்

ஒருங்கீரோதி கொடுங்குழை —பதிற்றுப் பத்து

அமர்த்த நோக்கின் சுடர்
நுதல் அசை நடை —பதிற்றுப்பத்து

இப்படிப் பெண்ணினம் இலக்கியத்தில் உரிய இடம் வழங்கப் பெருத காலத்தில் பெண்ணினத்தின் பெருமைக்குக் காப்பியம் பாடவந்த பெருங்கவி மன்னர் துறவுநிலை எய்திய இளங்கோவடிகளாவர்.

காப்பியம் என்பது தன்னிகரில்லாத் தலைவனை உடையதாதல் வேண்டும் என்பது அடிகளார் அறியாத தன்று. சிலப்பதிகாரத்துத் தலைவனுன கோவலனும் மிக மேம்பாடுற்றவன். அவன்,

'கதக் களிறு அடக்கிய கருணைமறவன்'

'நல்லாற்றுப் படுத்த செல்லாச் செல்வன்'

'பல்லாண்டு புரந்த இல்லோர் செம்மல்'
மண்தேய்ந்த புகழினன்
கண்டேத்தும் செவ்வேள் போன்றவன்
ஆயர்பாடியில் அசோதை பெற்றெடுத்த
பூவைப்புது மலர் வண்ணனை ஒத்தவன்.

அவன் இயற்பெயரை உள்ளவாறு சுட்டவும் அவன் சிறப்புக் காரணமாகக் கூறிய அடிகளார் கோபாலன் என்று, அவனை விளம்பாது கோவலன் என்று சற்றுத் திரித்தே குறிப்பிடுவாராஞர். அத்தகைய மேம்பாடுடைய கோவலனைக் காப்பியத் தலைவனுகக் கொள்ளாது, பெண்ணினத்தின் பெருமையைப் பறைசாற்றுவதற்கென்றே கண்ணகியைக் காப்பியத்தலைவியாகக் கொண்டார்.

தொடக்கத்திலேயே அவளுந்தான்

போதிலார் திருவினள் புகழுடை வடிவென்றும்
தீதிலா வடமீனின் திறமிவள் திற மென்றும்
மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள் பெயர்மன்னும் கண்ணகி என்பாள் மன்னே



இந்த நாட்டில் நாம் ஜனநாயகத்துக்காக இருக்கின்றோம், தன்னுரிமைத் தனியாணை பெற்ற இந்தியாவுக்காக இருக்கின்றோம். ஜனநாயக கொள்கைக்கு — அரசியல் ஜனநாயகத்தை மட்டுமல்ல, பொருளியல் ஜனநாயகத்தையும் குறிக்கும் உண்மையான, அடிப்படையான ஜனநாயகக்கொள்கைக்கு — மாறுபட்டதையெல்லாம் நாம் எதிர்க்கவே வேண்டும். வேறு எந்தக் கொள்கையும், வேறு எந்தச் செயல்முறையும் இங்கே திணிக்கப்படுவதை நாம் எதிர்ப்போம்.



என்று தெய்வத்தைக் குணத்தால் அறிமுகம் செய்வது போலக் கண்ணகியைப் பெருங்குணத்தால் நமக்கு அறிமுகம் செய்கிறார். 'மகளிர் மனம்போல வேறுபடும்' என்ற வள்ளுவர் கருத்தைப் புறக்கணிப்பார் போன்று, கண்ணகியை 'மாசறு பொன்னே! வலம்புரிமுத்தே!' என்றெல்லாம் பாராட்டிய அறிஞர் பெருமானாகிய கோவலன் மனம் கண்ணகியை விடுத்து மாதவி மாட்டுச் சென்ற செய்தியை வெளியிடுகிறார்.

பல்லாண்டுக் காலம் மாதவியிடம் பழகி அவளிடம் தான் பெற்ற பெண்ணுக்குப் பிறந்த நாள் விழா வெடுத்துத் தானம் பல செய்தகோவலன், திடீரென்று அவளை விட்டுப் பிரியும் மனமாறுபாடு கொண்டவனைக் காட்டி அவனை மீண்டும் கண்ணகிபால் கூட்டுகிறார். பரத்தை குலத்தில் பிறந்த மாதவியைக் குலம்பற்றிச் சொன்னது குணம்பற்றிக்கொள்ளுமாறு கற்புக்கரசியாகவே காட்டுகிறார். அவன் மகள் மணிமேகலை அறப்பெருஞ் செல்வியாக உலகுக்கு ஒளி மணியாகப் பின்னர் ஆகப்போகின்றாள் என்பதையும் குறிப்பாகச் சுட்டுகிறார்.

கோவலன் மனமே அடிக்கடி மாறுபட்டது கண்ணகிமனம் 'ஒருமை மகளிரின் மனம்' என்பதைச் சுட்டுவார் போலக்கோவலன் அழைத்ததும் கண்ணகி மதுரைக்குப் புறப்பட்ட திறத்தை நுவல்கிறார்.

மதுரையைநோக்கிச் செல்லும் கோவலன், கண்ணகி என்ற இருவருக்கும் கவுந்தியடிகள் என்ற பெண் துறவியைத் துணையாக்குகிறார். பெண்தெய்வமாகிய காளியின் கோயிலிலேயே, தெய்வத்தை வழிபடும் பெண் ஆவேசமுற்றவளாகக்காட்டி அவள் கண்ணகியையே 'கொங்கச்செல்வி, குடமலையாட்டி' என்றாற் போலப் புகழுமாற்றைப் புலப்படுத்துகிறார்.

குளக்கரையில் கோவலனைக்காண ஒரு பெண் தெய்வம் வந்ததாகவே பேசுகிறார். கவுந்தியடிகள் கோவலனிடம் பேசுமிடத்தும் 'கயல் நெடுங்கண்ணி காதற் கேள்வ' என்று கண்ணகியின்மூலமே கோவலனைச் சுட்டுவதாகக் குறிப்பிடுகிறார்.

மதுரையில் மாதவி என்ற இடைக்குல மடந்தை இல்லத்திலேயே அடைக்கலம்புகச் செய்கிறார். ஆண்டும் கோவலனுக்கு நண்பன் ஒருவனையும் சுட்டாது கண்ணகிக்கே ஐயை என்ற தோழியை அமைக்கிறார்.

மதுரையில் பெண்கள் ஆய்ச்சியர் குரவை நடத்தியதைக்காட்டியதோடு கோவலன் கொலையுண்ட செய்தியைப் பெண்கள்மூலமே வெளியிடுகிறார்.

செங்கோலினனுன பாண்டியமன்னன் ஒரு பெண்ணின் நாட்டியத்தில் மனம் செலுத்தியதால், ஊடல்கொண்டு பிரிந்துசென்ற மனைவியை ஊடல் தீர்க்கச் சென்ற வழியே பொற்கொல்லனைக்கண்ட அளவில் — இறைபுரியும் கடமை மறந்து மனமாறுபாட்டால் 'கொன்றச் சிலம்பினைக் கொணர்க' என்று ஆணையிட்ட திறத்தை விரிக்கிறார்.

கண்ணகி வழக்குரைக்கச்சென்ற காலை அவளுக்குத் தெய்வக்கோலம் கொடுத்துக் காட்டுகிறார். தவறாக நீதி வழங்கியதற்காகப் பாண்டியன் உயிர்நீத்த புகழைவிட, அவனுக்குப்பின் உயிர்வாழவிரும்பாது உடன் உயிர் நீத்த அவன் தேவிக்கு அழியா மேலிடம் வழங்கினார்.

கண்ணகியின் சீற்றம்தணிக்கப் பெண் தெய்வமான மதுராபுரித் தெய்வத்தைக் காட்டுகிறார். கண்ணகி கணவனுடன் விண்ணேகியதுகண்ட குறவர்கள் அவளுக்கே கோயில் எடுத்து வழிபடத் திட்டமிட்டதைக் குறிப்பிடுகிறார். பின் குறவர்மூலம் செய்திகேட்ட சேரன் தன் தேவியின் விருப்பப்படியே கண்ணகிக்குக் கோயிலெடுக்க முடிவுசெய்த திறத்தை விளம்புகிறார். அக்கண்ணகி கோயிலுக்குத் தேவந்திகை என்பாளையே பூசை செய்வாளாக அமர்த்துகிறார். கோவலன் கண்ணகி ஆகியோர் இறந்தமைகேட்டுக் கோவலன் தாயும், கண்ணகியின் தாயும், கவுந்தியடிகளும், மாதவியும் மனம் தாங்காமல் உயிர் நீத்த அன்பு மிகுதியைச் சுட்டுகிறார். கண்ணகி கோட்டத்திற்கு வந்த சிறுமிகள் சென்ற பிறப்பில் கோவலன், கண்ணகி ஆகியவர் தாய்கள் என்பதையும் விளக்குகிறார். தம்முடைய வரலாற்றைக் கண்ணகியாகிய பத்தினித் தெய்வமே குறிப்பிட்டதாகக் காப்பியத்தை முடிக்கிறார்.

[ இன்னும் வரும் ]



# தஞ்சாவூர் நெல்லை இயந்திரத்தின்மூலம் உலர்த்துகிறது



தமிழ் நாட்டின் தஞ்சாவூர் மாவட்டத்தைச் சேர்ந்த கிராமச் சுற்றுப் புறத்தில் சிமிண்டினுலும், கான்கிரீட்டினுலுமான சிறு சிறு கட்டிடங்கள் எழும்பியபோது, விவசாயிகளின் சிக்கலான பிரச்னைகளுள் ஒன்று நெல்லைக் காய வைத்தல்-தீர்ந்தது. இனிமேல் இவர்கள் கொட்டும் மழைக் காலத்திலும் நெல்லை உலர வைக்கலாம்.

தஞ்சாவூரில், செப்டெம்பர் - அக்டோபரில் குறுவை நெல் அறுவடையும், வட-கிழக்கு பருவ மழையும் சேர்ந்தாற்போல் வரும்.

1967-ம் ஆண்டு இந்திய உணவுக் கார்ப்பொரேஷனுல் 30 இடங்களில் எழுப்பப்பட்ட இக்கட்டிடங்கள், நாளொன்றுக்கு 160 டன் நெல் உலர்த்தும் வசதியமைந்த கட்டிடங்கள்.

தஞ்சாவூரின் விவசாயச் செழுமை, 'பாலும் தேனும் பெருகி ஓடி'க்கொண்டிருந்த, சோழ மன்னர்களின் ஆட்சியான கி. பி. இரண்டாவது நூற்றுண்டில் பிறந்தது. தஞ்சாவூர் டெல்டாவில் நீண்டு கிடக்கும் நெல் விளையும் நிலத்திற்குப் பாசன வசதியளிக்கும் காவேரியின் குறுக்கிலுள்ள பெரிய அணைக்கட்டு, சோழர்களுள் சிறந்தவனுன கரிகால் சோழனுல் கட்டப்பட்டது. இவ்வணைக்கட்டு சென்ற நூற்றுண்டில் புதுப்பிக்கப்பட்டாலும், பண்டைய மன்னனொருவன் தன் மக்களின் மேல்கொண்ட ஆழ்ந்த அன்பின் சின்னமாகவே இது கருதப்பட்டு வருகிறது.

இன்று, இம் மாவட்டத்தின் 18.8 லட்ச ஏகர் நெல் விளைவிக்கும் பூமியில், 15 லட்ச ஏகருக்குச் சிறிது குறைவான நிலம் பாசனம் பெறுகிறது.

'தமிழ் நாட்டின் நெற்களஞ்சியம்' என்று புகழ் பொருந்திய தஞ்சாவூர் மாவட்டம், சமீப காலத்தில் நெல் உற்பத்தியில் பெரும் முன்னேற்றம் கண்டிருக்கிறது. சிறிது

காலத்திற்கு மூன், ஆடுதுறையிலுள்ள விவசாய ஆராய்ச்சி நிலையம் இங்கு அறிமுகப்படுத்திய உயர் மகசூல் தரும், குறுகிய கால, குள்ள ரக நெல், ஏ.டி.டி-27-இனுல் இப்பிரதேசம் விவசாயச் செழுப்பில் இன்னமும் முன்னேற்றம் கண்டது.

குறுகிய கால ரகமான ஏ.டி.டி-27, இனுல் சம்பா விளையும் ஆறுலட்ச ஏகர் ஒருபோக நிலத்தை இருபோக நிலமாக மாற்றுவது சாத்தியமாயிற்று. தமிழ் நாட்டின் அரிசி உற்பத்தியை அதிகரிக்கவும், மதுரையிலும் மற்ற இடங்களிலும் விரும்பப்படும் மத்திய தர சன்ன அரிசி உற்பத்திக்காகவும், 1967-ம் ஆண்டு இந்த இருபோக விளைச்சல் திட்டத்தை விஸ்தரிக்க மாநில அரசு தீர்மானித்தது. ஏ.டி.டி-27 ஏகர் ஒன்றுக்கு 4,000 ராத்தல் மகசூல் தரும் சிறப்பு வாய்ந்தது. இதன் அரிசி, முதல் போகத்தில் விளையும் உள்ளூர் ரகத்தை விடச் சன்னமானது.

ஆயினும், இப் புது ரகத்தில் மிகவும் கடுமையான குறையொன்றிருக்கிறது. ஈரக் காற்றில் இதன் தானியங்கள் முளைத்து விடுகிறது. தஞ்சாவூரின் முதற்போக அறுவடை அனேகமாக ஈரக் காற்று அடிக்கும் பருவத்திலேயே செய்யவேண்டி வருவதால், விளைச்சலில் மாறுதலைக்கொண்டு வர நினைத்தோருக்கு மிகவும் கவலையளித்தது.

இத்தடங்கலை எப்படித் தீர்ப்பது என்பது முக்கியமான பிரச்சினையாயிற்று. பருவ நிலையின் மாறுதலைப் பாராட்டாமல் நெல்லை உலர்த்தக் கூடிய நவீன நெல் உலர்த்தும் கருவிகளை வைப்பதுதான் இதற்குத் தீர்வு காணும் வழி. போர்ட் பௌண்டேஷனுல் பிரேரிக்கப்பட்ட இவ் விஷயத்தை மத்திய அரசாங்கம் ஏற்றுக்கொண்டு உணவுக் கார்ப்பொரேஷனுக்கு இத் திட்டத்தை செயலாக்க அனுமதியளித்தது.

தொழிலியலில் முன்னேற்ற மடைந்த நாடுகள் பின்பற்றும் இம் முறையில் அனேக அனுகூலங்களிருக்கின்றன. ஈரக் காற்றடித்தால் கூட நெல்லை உலர்த்த முடிவது இவைகளுள் முக்கியமானது. நெல்லை வெய்யிலில் உலர்த்துவதற்கு, தானியங்கள் நன்குக முற்றிய பின்னரே அறுவடை செய்ய வேண்டியிருக்கிறது. இதனுல் மணிகள் சிந்தி நஷ்டமேற்படலாம். இயந்திரத்தினுல் காய வைப்பதற்கு மணிகள் நன்குக முற்றும் முன்னர் அறுவடை செய்து விடலாம். இன்னொரு அனுகூலம் என்னவென்ருல், இயந்திரம் ஒரே சூட்டில் உலர்த்துவதால் நெல் குத்தும்போது அரிசி உடையாது. மேலும், நெல்லை வெய்யிலில் காய வைக்கும் போது, பறவைகள், எலி, பெருச்சாளிக்கும் பங்கிட வேண்டும். அப்படிக் கல்லாமல் உலர்த்ததும் இயந்திரங்கள் நெல்லுக்கு நெல் திருப்பித் தந்து விடுகிறது.

இயந்திரம் மூலம் உலர்த்தும் முறையில், நெல்லில் உஷ்ணக் காற்றைச் செலுத்தி உலரவைக்கப்படுகிறது. நெல்லிலுள்ள ஈரத்தின் அளவை நிர்ணயித்த பின்னர் உலரவைக்கும் வேலை ஆரம்பமாகிறது. புனல் மூலமாக இயந்திரத்தில் செலுத்தி சுத்தம் செய்யப்பட்ட நெல்லின் ஈரத்தை இயந்திரத்தின் மூலம் 19 சதவிகித மாகக் குறைக்கப்படுகிறது. பின்னர் உலோகப் பாத்திரமொன்றிலிட்டு 8 மணி நேரம் ஆற வைக்கப்படுகிறது. இம்மாதிரியே ஈரம் 14 சதவிகிதத்திற்குக் குறைகிற வரையில் மாறி,மாறி உலர்த்தலும், ஆறப்போடுதலும் தொடர்ந்து நடக்கிறது. பின்னர், நெல்லைக் கிடங்கிற்குக் கொண்டு போகப்பட்டு, சாக்கிலிட்டு, நிறுவை செய்யப் பட்டு அனுப்ப வேண்டிய இடங்களுக்கு அனுப்பப்படுகிது. திறனை இம் முறையினுல், நெல்லைக் குறித்த சமயத்தில் உலர்த்த முடிவதுடன், அறைவை மில்களுக்கும் தட்டாமல் நெல் கிடைக்கிறது.

தஞ்சாவூரின் இந்த முயற்சி, நாட்டிலுள்ள மற்ற நெல் விளைக்கும் மற்ற பிரதேசங்களிற்கும் இம் முறையை விஸ்தரிக்கும் சந்தர்ப்பத்தை ஏற்படுத்தி இருக்கிறது. •

---

தேவதரிசனம்

## தோற்றம்

தோற்றத்தை வித்தையாலும் தோற்றுததை அவித்தையிலும் உபாசிக்கின்றனர்.

பேரிருட்கடலாம் வித்தையைத் தாண்டி சிறிய சிறிய இருளாம் அவித்தையைக் கடக்க வேண்டும்.

---

# உமாரின் விருக்கள்

— சாலை இளந்திரையன்

மானுடச் சமுதாயத்தின் வரலாறு சுவையானதோர் தொடர்கதை. அதன் ஒவ்வோர் அத்தியாயமும், — அத்தியாயத்தின் ஒவ்வொரு பகுதியும், — அடுத்துவரும் அத்தியாயங்களைச் சிறுகச் சிறுக உருவாக்குகிறது. இடம், காலம் என்பவைகளால் விலகி நிற்கும் மனிதர்கள், சிந்தனை என்னும் வாகனத்தால் இவைகளைத் தாண்டி இணையமுடியுமானால், அடுத்துவரும் அத்தியாயங்கள் எப்படி எப்படி இருக்கவேண்டும் என்பதை முதலிலேயே முடிவுசெய்துவிடும் ஆற்றல் அவர்களுக்கு உண்டு. இதுவரையில், மானுடச் சமுதாயம், காலத்திரையையும் இடத்திரையையும் முழுவதுமாக ஊடுருவ முடியவில்லை. எனவே, சமுதாயத்தின் வரலாற்றை உருவாக்கும் கொள்கைகளும் நடைமுறைகளும், பெரும்பாலும், கால–இடச் சூழல்களுக்குக் கட்டுப்பட்டவைகளாகவே உள்ளன; காலம் மாற மாற, ஓர் இடம் மற்றோர் இடத்துடன் இணைய இணைய, நாம் ஆக்கி வளர்த்து வந்துள்ள நடையும் நடைமுறையும் மாறிக்கொண்டே வரவேண்டியுள்ளது.

## கடவுளைப்பற்றி ...

மனிதச் சிந்தனையை ஆட்கொண்டிருக்கும் பல கொள்கைகளில் ஒன்று கடவுளைப் பற்றியது. 'கடவுள் என்று ஒன்று உண்டா, இல்லையா?' என்னும் வினவும், 'அப்படி ஒன்று இருந்தால் அதன் இயல்புகள் என்னென்ன?' என்னும் வினவும் காலங்காலமாக மானுடச் சமுதாயத்தில் கேட்கப்பட்டு வந்துள்ளன. "கடவுள் என்பது தோற்றமும் முடிவும் இல்லாதது; அதுவே அண்டத்தையும் அதன் ஒவ்வொரு பிண்டத்தையும் படைத்தது; அது நேற்றும் இன்றும் நாளையும் ஒரே படித்தாக இருப்பது." இவை கடவுளைப்பற்றி (அதன் உண்மையில் நம்பிக்கைகொண்டோர்) சொல்லியுள்ள கருத்துக்கள். ஆயினும் கடவுளையும் மனிதனையும் தொடர்புபடுத்திச் சிந்தித்தவர்கள் இந்த அளவோடு அமையவில்லை. தத்தம் (கால, இடச்) சூழ்நிலைகளுக்கு ஏற்ப, அவர்கள், கடவுளுக்கு விதவிதமான பண்புகளை ஏற்றியுள்ளார்கள். அவைகளுக்கு ஏற்பவே, மனித வாழ்வுக்கு நோக்கமும் நடையும் கற்பித்து வந்திருக்கிறார்கள்.

## உமார் கய்யாம்

கி. பி. பதினொன்றாம் நூற்றாண்டில் பாரசீக நாட்டில் வாழ்ந்த உமார் கய்யாம் என்னும் அறிஞரின் கவிதைகள் மேலே குறிப்பிட்ட பொருள்களைப்பற்றிய சில சிந்தனைகளை எழுப்புகின்றன. இவரை, அசல் உலகாயதவாதி என்றும் பெசிமிஸ்ட் என்னும் அவலநோக்காளர் என்றும் பலர் பலவிதமாகப் பேசுகிறார்கள். இந்த இப்பிறவிக்கு முன்னும் பின்னும் உள்ளவற்றை அறிந்துகொள்ள எந்த வாய்ப்பும் இல்லை என்னும் கருத்து இவருடைய சில பாடல்களில் தொனிக்கிறது. உலகவாழ்வு நிலையில்லாதது என்னும் கருத்தும் சில இடங்களில் முனைப்புப் பெறுகிறது. ஆனால், இவர் எழுப்பியுள்ள சில கேள்விகளைப் பார்க்கின்றபோது, "கடவுளைப்பற்றிய ஒரு புதிய உண்மையைக் காணவேண்டும், அதன்மூலம், மனித வாழ்வுக்கே புதிய பொருள் தரவேண்டும்" என்று இவர் தீவிரமாகச் சிந்தித்திருப்பதாகத் தெரிகிறது.

## திரைமேல் திரைகள்

கடவுளைப்பற்றிய தெளிவான திட்டவட்டமான ஒரு கருத்தை இதுவரையில் யாரும் உண்டாக்கவில்லை. ஓரிடத்து ஒருகாலத்து ஒருவருக்குச் சரியாக இருப்பது பிறிதோரிடத்து வேறொரு காலத்து மற்றவர்க்குத் தவறாகப்படுகிறது; ஒருவருக்கு முழுமையாகத் தோன்றுவது மற்றவர்க்குத் தவறாகப் படுகிறது; ஒருவருக்கு முழுமையாகத் தோன்றுவது மற்றவர்க்குக் குறையுடையதாகவும் மேலும் வளர்க்கப்படவேண்டிய கருத்தாகவும் தோன்றுகிறது.

நாடும் தெய்வம் இதுவென்று
ஞாலத்தறிய முயல்கின்றூர்;
தேடித் தேடிப் பார்த்ததெல்லாம்
திரைமேல் வந்த திரையாகும்.

தமக்கு முந்தியவர்களுடைய கடவுளாராய்ச்சிகளின் முடிவை இப்படி விளக்குகிருர் உமார் கய்யாம். ஒவ்வொருவரும் தத்தம் திறமைகளைக் காட்ட முயன்றிருக்கிருர்கள்; உண்மையைக் கண்டறியவோ, பிறர் விளங்க அதை எடுத்துரைக்கவோ அவர்களால் முடியவில்லை.

'அல்லும் பகலும் பல நூல்கள் ஆய்ந்து கற்றேன்'; அவைகளிலே, தொல்லை ஆன்ம நிலை இது எனச் சொன்ன சொற்கள் ஒன்றுமில்லை!' ஏற்கனவே இருந்துவரும் தத்துவப் புத்தகங்களின் பயனின்மையை இவ்வாறு கூறும் உமர், உடன்கால ஞானிகளும் தமக்குத் தெளிவு ஏற்படுத்தவில்லை என்கிருர் :

அன்றென் இளமைப் பருவத்தில்
அறிவிற் சிறந்த புலவரையும்,
நன்று சில முடையபெரு
ஞானி களையும் அடிபணிந்து
நின்று கேட்ட வாதங்கள்
நினைப்பின் அரிய ஆயிடினும்
சென்ற வாயில் வழியேதான்
திரும்பி அந்தோ, வந்தேனே!

கடவுளைப்பற்றி மட்டுமல்ல; கடவுளோடு தொடர்புபடுத்தப்படும் மனிதனின் ஊழ், இறப்பு என்பவைகளைப்பற்றியும் ஒன்றும் புலப்படவில்லை :

மண்ணை வலமாய்ச் சுற்றி வந்தேன்,
வானும் அளந்து கணக்கிட்டேன்;
நண்ணும் வழியில் பல சிக்கல்
நாடி நன்கு விளக்கி வந்தேன்;
எண்ணும் மனிதர் தமையடையும்
இறப்பும் ஊழும் இவையென்று,
திண்ண மாகச் சொல்ல எதும்
தெரியா திங்கே திகைத்தேனே!

'எவ்வளவோ சாதனைகளைப் புரிந்திருக்கிற மனிதன், இறப்பையும் ஊழையும் பற்றித் திட்டவட்டமாக ஒன்றும் தெரிந்துகொள்ளவில்லை; தெரிந்துகொண்டதாகச் சிலர் பலர் கூறுவனவெல்லாம் ஏற்கத்தகாதவையே' என்பது இதன் கருத்து. இதைத்தான், 'இருளின் வாயிற்படி தாண்டி எமக்கு முன்னே சென்றவர்கள், கருது கோடி கோடியின்மேல் கணக்கில்லாதார் ஆயிடினும், ஒருவரேனும் 'வழிஇது' என்று உண்மைகூற வந்தனரோ?' என்னும் கேள்வியாகவும் எழுப்புகிருர் உமார்.

## யார் பொறுப்பாளி ?

இந்தக் கேள்வியோடேயே, அவருடைய காலம் வரையில் கூறப்பட்ட மதக் கருத்துக்கள் சிலவற்றை ஆராய முற்படுகிருர் உமார் கய்யாம்: 'கடவுள் எல்லாம் வல்லவன், எல்லாவற்றுக்கும் மூலகாரணன் அவன் இல்லாமல் எந்த இயக்கமும் இல்லை' என்னும் கொள்கையையும், பாவ, புண்ணியங்களைப்பற்றிய கொள்கையையும் பொருத்திப்பார்க்கிருர். பார்க்கிறபோது, அதிலே பெரிய முரண்பாடு இருப்பதாக அவருக்குத் தோன்றுகிறது. அதன் விளைவான கேள்வி, தீயவன் அல்லது இழிந்தவன் என்று பழிக்கப்படும் ஒருவனின் குரலாக ஒலிக்கிறது:

வந்த வந்த மனிதரெலாம்
வளைவும் நெளிவும் கண்டென்னைச்
சந்த மில்லாப் பானையெனத்
தள்ளி வைத்துச் சென்றனரால்;
அந்தநாள் அக்குயவன் கை
ஆட்டத் தாலே நேர்ந்தபிழைக்கு
இந்த நாளில் ஏழைஎனை
ஏனோ குறைகள் கூறுவரே?

'ஈசனே என்னைப் படைத்தவனுல், நான் இவ்வாறு இருப்பதற்கு அவனன்றோ காரணம்? எய்தவன் இருக்க அம்பை நோவதுபோல, உலகம் என்னைப் பழிக்கிறதே! ஈசன் என்னை மண்ணிலிருந்து படைத்தானும்; "படைத்த மண்ணும் நல்மண்ணே? பழுது நிறைந்த பொய்மண்ணே? படைத்த மண்ணில் பழுதுளதேல் பழிதான் எவரைச் சார்ந்ததுவாம்?" கடவுள் மனிதனைப் படைத்தது உண்மையானுல், - ஏவியவன் தன்னுல் நடைபெற்ற செயலுக்குப் பொறுப்பு ஏற்பதுபோல, இயற்றியவன் தன்னுல் படைக்கப்பட்ட பொருளின் தன்மைக்குப் பொறுப்பு ஏற்பதுபோல, மனிதனின் மேன்மை அல்லது கீழ்மைக்கும் ஆண்டவனே பொறுப்பு ஏற்கவேண்டும்; அவற்றின் பொறுப்பை மனிதன்மீதே சுமத்தக்கூடாது.

## பேரறிவாளனு ?

அடுத்து, 'இறைவன் எல்லாம் அறிவோன், எல்லையில்லா அருளாளன்' என்னும் கொள்கைகளை விமர்சிக்கிருர் உமார்: துன்பம் வரும்போது மக்கள் வானத்தை

நோக்கி இறைஞ்சுகிருர்கள்; இறைவா, இறைவா என்று ஓலமிடுகிருர்கள். எல்லாம் அறியக்கூடிய இறைவன் இவர்களின் துன்பத்தை மட்டும் அறியவில்லை என்று முடிவு செய்துகொண்டு, அதை அவனுக்கு எடுத்துச் சொல்கிருர்கள். எவ்வளவு பெரிய முரண் இது! எல்லாம் அறிவோன் இவர்களின் துன்பத்தை மட்டும் அறியமாட்டாஞ?

ஈசா! உள்ள மிரங்கிடு; யான்
ஏழை, ஏழை என்றுநிதம்
கூசா தேஞே கூப்பிடுவாய்?
குறைகள் கூறி நின்றிடுவாய்?
பேசா தவரைப் பேணுஞே?
பெற்ற மகவைக் காவாஞே?
ஆசான் நீயோ? ஈசனெதும்
அறியாச் சிறிய பாலகஞே?

சமயவாதிகள், ஒருபக்கம், "இறைவன் எல்லாம் அறிந்தவன் என்கிருர்கள்; அவர்களே, மறுபக்கம், "அழுதால் அவன் அருளைப் பெறலாம்" என்று பக்திமார்க்கம் உபதேசிக்கிருர்கள். படைத்தவனுக்குக் காக்கும் பொறுப்பு உண்டு. அவனுக்கு அதை நினைவூட்டவேண்டும் என்று நாம் சொல்லும்போது, "படைத்தவன் அவன்தான் என்று நாம் நம்புகிருேமா?" என்பதே அய்யத்துக்கு இடமாகிவிடுகிறதல்லவா?

## அருளாளஞ ?

"உலகம் துன்பமயமானது. இன்ப நெறிக்குத் தடைகளை எழுப்பிக்கொண்டே இருப்பது. அந்தத் தடைகளை வெல்பவனே பேரின்பத்துக்கு உரியவன்." இது ஒருசார் மதவாதம். தடைதாண்டும் இந்தத் தத்துவத்தையும் இறைவன் அருளாளன் என்னும் கொள்கையையும் இணைத்துப் பார்க்கிருர் உமார்; இவை இரண்டும் இணங்கிப் போவதாக அவருக்குப் படவில்லை:

வழியிற் குண்டு குழிவெட்டி
வலையுங் கட்டி, - மதுவுண்டு,
விழவோர் விதியும் அந்நாளே
விதித்து வைத்து, என் கேடெல்லாம்,
அழியாப் பாவம் அதனுலே
ஆன வினைவென்று அறைவாயோ?
தெளியாது உலகில் என்றென்றும்
திகைத்து மறுகி நின்றேனே!

தடைகளை ஏற்படுத்தியவன் இறைவன்; அதிலே நான் விழவேண்டும் என்று விதித்தவனும் அவன். நான் விழுந்ததற்கு அவனே காரணமாக இருக்க, என்னுடைய பாவமே காரணம் என்று குற்றம் சாட்டுவாஞ? அது பேரருளாளனின் செயலாகுமா?

## குற்றவாளி அல்லவா ?

மனிதனை மண்ணுல் செய்தவன் இறைவன் எனவே, மனிதன் மண்ணின் இயல்பு உடையவஞகவே இருப்பான். அவனிடமிருந்து பொன்னை எதிர்பார்ப்பது என்ன நியாயம்? கல்நெஞ்சர்கள் கூட வட்டிக்கு வட்டி கேட்பரே தவிர, மண்ணுக்கு ஈடாக பொன்கேட்க மாட்டார்களே! எல்லையில்லா அருளாளன் என்று சொல்லப்படுகிற இறைவன் "மண்ணுக்கீடு பொன் கேட்டால், வலியில் (லா) மனிதர் என்செய்வார்?" எனவே இந்தத் தத்துவம் சரியில்லை என்று அறுதியிடும் உமார்,

நாடும் ஈசன் பாவிகளை
நரகில் வீழ்த்தி விடுவானென்று
ஏடு நிறையப் பண்டிதர்கள்
எழுதி வைத்துப் போய்விட்டார்!

என்கிருர். இத்தகையதத்துவப் பண்டிதர்களால் இறைவனுக்கே பழி ஏற்பட்டுவிட்டது என்று குமுறுகிருர் உமார்: 'இறைவன் மனிதனை மண்ணுல் படைத்தான்; எல்லா இன்பங்களும் உள்ள ஏதேன் (ஈடன்) தோட்டத்தில் வாழவிட்டான்; மனிதனைச் சோதிக்க ஒரு சாத்தானையும் பாம்பு உருவில் அங்கே வைத்தான். அதனுல் மனிதன் பாவியாகிவிட்டான். இது விவிலிய வேதம் தருகின்ற பாவக்கதை. இதைக் கேட்டுக் கொதிப்படைந்து அந்த இறைவனையே சாடுகிருர் அவர்:

இற்ற மண்ணுல் மனிதனையும்
எழுப்பி ஈடன் ஆளவிட்டுச்
சுற்றும் அரவும் அவ்விடத்தே
சூதாய்ப் பதுங்க வைத்தவனே;
முற்றும் பாவி என அவன்தன்
முகத்தில் கரியைப் பூசிய அக்
குற்றம் நீங்க மன்னிப்புக்
கொடுத்து நீயும் பெறுவாயே!

'இந்தக் கதை உண்மையானுல், மனிதனை எளியஞகப் படைத்தவன் நீ; அவனுக்குச் சோதனைகளையும் தொல்லைகளையும் படைத்தவன் நீ. இவற்ருல் அவன் தவறிவிட்டால், "பாவி" என்னும் கரியை மனிதன் முகத்திலே பூசியுள்ளாய். இது நீ செய்த பெரிய குற்றம்!

எனவே மனிதனுக்கு மன்னிப்பு வழங்குவ தோடு, ஆண்டவனே, நீயும் மனிதனிடம் மன்னிப்புப் பெறவேண்டும்!

## குற்றமில்லாமல் வாழ்வா ?

உலகநடையைக் கவனிக்கிருர் உமார். குற்றம் என்று சொல்லப்படுவதைப் புரியாத வன் ஒருவன்கூட இல்லை; அதைச் செய்யா மல் வாழும்படியான வாய்ப்பும் உலகில் இருப்ப தாகத் தெரியவில்லை. எனவே, "இந்த உலகில் பாவமிலார் யாரும் ஒருவர் உளரோ? இந்த உலகில் பாவமிலாது இருந்து போக வழி உண்டோ? மண்ணிற் பாவம் செய்யாத மனிதர் உண்டோ? மண்ணிற் பாவம் செய் யாது வாழும் வாழ்க்கை எளிதோ?" என்றிவ் வாறு கேள்விகளை எழுப்புகிருர். 'ஒருவருமே கடைப்பிடித்திராத, கடைப்பிடிக்கவே முடி யாத நெறி எதற்கு? அதற்கு உயர்நெறி என்னும் பட்டயம் எதற்கு?' என்னும் கேள்வி களே இங்கு எழுப்பப்படுகின்றன. குற்றம், பாவம் என்பவற்றிற்கு நாம் கொடுத்துவரும் விளக்கம் (இலக்கணம்) சரியில்லை என்னும் சிந்தனை இங்கே எழுகிறது.

இந்தச் சிந்தனையின் வெளிச்சத்தில் இறை வனுக்குப் புதிய விளக்கம் தர முந்துகிருர் உமார். இறைவன் பெரியவன் என்ருல், அவன் எந்த நிலையிலும் நம்மைக் காக்க வேண்டும். நாம் பலவீனமுடையவர்கள் என்பதால் தவறு செய்வது நம்முடைய இயல்பு. அவைகளையும் சேர்த்து நம்மை ஏற்றுக்கொள்ளுபவனே கருணையுள்ள இறை வஞக இருக்கமுடியும்; அவைகளையும் சேர்த்து நம்மை ஏற்றுக்கொள்ளுபவனே அறிவுப் பேரொளியாகிய இறைவஞக இருக்க முடியும். "மண்ணிற் பாவம் செய்தவரை மாருநரகில் இடுவாயேல், மண்ணில் உன்னைப் பெருங்கருணை வள்ளல் என்பதும் இசை வாமோ?" என்றும், "சிந்தை கலங்கித் தவறிடு மேல் தெய்வ அருளும் தவறிடுமோ?" சிந்தை மங்கி மழுங்கிடுமேல் தெய்வ ஒளியும் மழுங் கிடுமோ?" என்றும் உமார் எழுப்பும் கேள்வி களின் பொருள் இதுவே.

## என்னதான் செய்வது ?

கடவுட் கொள்கையிலும் அதைச் சார்ந்த கருத்துக்களிலும் ஒரு புதுமை காண விரும்பி யுள்ளார் உமார்க்யாம். ஆயினும், இருந்த கொள்கைகளின் குறைகளைச் சுட்டிக்காட்ட முடிந்ததே தவிர, ஒரு புதிய கொள்கையை அவரால் வகுக்க முடியவில்லை. மனிதன் பிறவியிலேயே சில இயல்புகள் உடையவன், அந்த இயல்புகளுக்கு ஏற்பவே அவன் வாழ்ந்து முடிகிருன்; அந்த வாழ்வில், ஒன் றைக் குற்றமென்றும் மற்ருென்றைக் குண மென்றும் (நாம் இப்போது செய்து வருவது போல்) கற்பிப்பது பொருத்தமில்லை; அவ்வாறு கற்பிப்பதாலேயே மனித வாழ்வைப்பற்றியும் கடவுளைப்பற்றியும் மனிதன் தவருன கணிப்புக் களைச் செய்கிருன். எனவே, மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரை உள்ள வாழ்வில் கடினமான கட்டுத்திட்டங்களை ஏற்படுத்தாமல் சூழ்நிலைகளுக்கு ஏற்ப வாழுமாறு மனிதனை விட்டுவிடவேண்டும்; கடவுளின் பெயராலோ மதங்களின் பெயராலோ மனித வாழ்வின் இயக்கத்தைக் கட்டுப்படுத்தக்கூடாது என்று அவர் வலியுறுத்த விரும்புவதாகவே தெரி கிறது.

மிகத் தவருன கொள்கை போலவும், மனி தனை நாகரிகத் தடத்திலிருந்து பிரிக்கும் கோட்பாடு போலவும் தோன்றுகிற இக் கருத்தை உமார் வலியுறுத்தக் காரணம் என்ன ? ... 'மனித வாழ்வைப் பற்றியும் அதனேடு தொடர்புடையவைகளைப்பற்றியும் அறிஞர் என்பவர்கள் சொல்லி வந்துள்ள கருத்துக்கள் தவருனவை; அவைகளைப்பற்றி அடியோடு வேறுபட்ட சிந்தனையை மனிதன் தொடங்கவேண்டும்' என்பதைச் சுட்டிக் காட்டவே அவர் இவ்வாறு கூறினுர் என்று கொள்ளவேண்டும், நாலுமணி நேரம் வரிசை யிலே கால்கடுக்கக் காத்துநின்று வாங்கிய ரேஷன் அரிசி கல்லும் மண்ணும் பூச்சி புழுவு மாக இருப்பதைக்கண்டதும், "இதைவிடப் பட்டினி கிடக்கலாம்!" என்று குமுறுகிருேம் அல்லவா? இதே போன்ற ஏமாற்றக் குமுறலின் விளைவுதான் உமார்கய்யாமின் கட்டற்ற உலகாயத உபதேசம். எனவே, "நல்லதாகவும் புதியதாகவும் ஒரு வாழ்க்கை நெறியைக் கண்டறிய முயல வேண்டும்" என்பதே அதன் பொருள்,

குறிப்பு:- இதில் வரும் மேற்கோள்கள் யாவும் கவி மணி அவர்கள் தமிழாக்கிய "உமார்கய்யாம் பாடல் கள்" என்னும் புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டவை. அந்த மொழிபெயர்ப்பைத் தழுவியே இந்த ஆய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது.

தொடர்ச்சி : 2




# சிகேதன்

தேவதரிசனம்

— அம்ருத ஏ. எஸ். ராகவன்

அலமுவுக்குப் பெருமை பிடிபடவில்லை.

என்னோடு அவளும் வீட்டுக் கூரையின் மேல் ஒயிலாக உட்கார்ந்தாள்.

அவள் வீற்றிருந்தகோலத்தைப் பார்க்கிறபோது, எனக்கு பார்வதியின் நினைவு வந்தது.

அது ரொம்பக் காலத்துக்கு முன்னாலே நடந்த விஷயம். அதாவது எனக்குப் பதினாறு, பதினேழு வயதிருக்கும்போது. ஏன், அந்தப் பார்வதியே என் துணைவியாகவும் ஆகி இருக்க வேண்டியவள்தான். ஆகக் கூடவில்லை. அதெல்லாம் ஒரு கதை மாதிரி நடந்துபோன சமாசாரம். அலமுவுக்கு அந்தக் கதை தெரியும். அதைப் பற்றி அவள் கவலைப்படவில்லை. ஒருமுறை அந்தப் பார்வதி இங்கு வந்திருந்த போதுகூட என்னையும் அவளையும் தனியே பேசவிட்டு விட்டு அலமு வெளியேறினாள். எதற்குமே ஒரு தடை போட்டால் அது திமிறப்பார்க்கும். தடை இல்லாது போனால் ஒடுங்கி நிற்கும்.

'ஏண்டி உனக்குப் பயமாக இல்லையா?' என்று கேட்டேன்.

'எனக்கு என்ன பயம்?... அவள் அவளாகவும் நீங்கள் நீங்களாகவும் இருக்கிற போது, பயப்படுவானேன்?' அலமு திருப்பிக் கேட்டாள்.

எத்தனை பெண்களுக்கு இந்த ஞானம் இருக்கக் கூடுமோ, நான் அறியேன். எல்லோருமே ஒரு 'உடைமை உணர்ச்சி'யைப் பற்றிக் கொண்டு தவிக்கிற அவஸ்தையைப் பல படியாகப் பார்க்கிறபோது, இப்படி அலமு அஞ்சாத வீராங்கனையாக விளங்குகிறாளே, அது போதும். என்னவோ 'ஸெக்ஸ்' என்பது பாவம் என்றும், அதில் இடருகிற பிறவி வீண் என்றும் பொதுவான ஒரு கொள்கை நம்முள் நிலவுகிறது.

இதனால் நான் 'ஸெக்ஸு'க்கு வக்காலத்து வாங்குவதாக எண்ணிவிடாதீர்கள். அப்படியே நீங்கள் எண்ணுவதானாலும், எனக்கு அக்கறை இல்லை. அலமு அல்லவா அந்தத் தீர்ப்பை வழங்கவேண்டியவள்!

பார்வதி பக்கத்து வீட்டில் இருந்த பெண். ஐந்து குடித்தனங்கள் இருந்த அந்த வீட்டில், முப்பத்து நான்கு ஜீவன்களுக்கிடையே, அவள் ஒருத்தி தான் சந்திர பிம்பம் மாதிரிப் பிரகாசித்தாள். என்னுடன் ஆற்றுக்குக் குளிக்க வருவாள். நெடுநேரம் நீரில் அளைவோம். வெய்யில் சுரீர் என்று உறைக்கிற வரை குளியல் முடியாது. சில சமயம் உச்சிவெய்யிலைத் தலையில் சுமந்துகொண்டு கூட வீட்டுக்குத் திரும்புவோம்.

மெல்ல மெல்ல அவள் வளர்ந்தாள். வளர வளர என்னிடமிருந்து அவள் மெல்ல மெல்ல விலகலானாள்.

'குளிக்கப் போகலாமாடி?' என்றால், 'ஊஹூம், அம்மா சண்டை போடுவாள்... நான் மாட்டேண்டா,' என்பாள். 'ஏன், உனக்கு என்ன வந்து விட்டது?' என்பேன். 'அதென்னவோ, நீ புருஷப் பையன். நான் பெண் பிள்ளை இல்லையா?' என்று தர்க்கம் வரும். 'அதை இப்போது தான் கண்டு பிடித்தார்களா?... சும்மா வாடி... நான் உன்னைக் கடித்துத் தின்றுவிட மாட்டேன்.' என்பேன். ஆனால் அவள் வரமாட்டாள்.

பார்வதி உடன் வராமல் எனக்குக் குளியலே பிடிக்கவில்லை. ஒரு மாத காலம் ரொம்பச் சிரமப்பட்டேன்.

அன்றைக்கு அமாவாசை. எங்கள் தெருவிலிருந்து ஆற்றுக்குப்போகும் சந்தில் ஏனோ முனிசிபல் விளக்குகள் எரியவில்லை. நான் அந்தச் சந்தில் தனியே நடந்தேன்.

ஆற்றங்கரைக்குப்போய் உட்கார்ந்தேன். கரு நீலமாய் ஆற்று நீர் சுழித்து ஓடுவதையே பார்த்தபடி எத்தனை நேரம் உட்கார்ந்திருந்தேனோ, 'களுக்' என்று ஒலி கேட்டதும்தான் நினைவு திரும்பிற்று.

'ஏண்டா இங்கே உட்கார்ந்திருக்கே?' பார்வதி கேட்டாள்.

'உனக்கென்ன அதைப்பற்றி?' நான் சீறினேன்.

'கோபமா என்மேல்?'

'நீதான் குளிக்க வருவதில்லையே!'

'அதெப்படிடா முடியும்? நான் சின்னப் பெண்ணு இன்னமும்?'

'போடி, நீ பெரிய இவளோ?'

அவள் சிரித்தாள். என் அறியாமையை எண்ணி அவள் நகைத்ததை ஏனோ என்னால் பொறுக்க முடியவில்லை. எனக்குள் பொங்குகின்ற தாபம்தான் அவ்வாறு சீற்றமாய் வெடித்ததென்பது இப்போது புரிகிறது.

'போகட்டும்... ஏதாவது பேசேன்... உன்னோடு பேசி எவ்வளவுநாள் ஆகிறது?' என்றாள் அவள்.

'நானும் நீயும் குளிக்கலாமா இப்போது, சொல்லு...' என்றேன்.

'அய்யய்யோ, யாராவது பார்த்து விட்டால்?'

'யார்டீ பார்க்கப்போறா?... அப்படியே பார்த்தாலும் என்னவாம்?'

'போடா, உனக்குப் புரியாது.'

'குளிக்கலாமா கூடாதா சொல்லு முதலில்.'

'சரி. குளிப்போம்... ஆனால் சட்டுப் புட்டுனு கரை ஏறிடணும்.'

நான் மண்டபத்திலிருந்தே ஒரு 'அந்தர்' அடித்தேன். அவள் நீந்தி வந்தாள். நான் தண்ணீருக்குள் மூழ்கி விலகிப்போனேன். அவள் பாய்ந்து பாய்ந்து நீந்தினாள். ஒரு முழுக்கு. நான் அவளுக்கு மிக அருகில்போய் தலையை உயர்த்தினேன். அவள் சிரித்தாள். நான் கையை நீட்டினேன். அவள் பற்றிக் கொண்டாள். இரண்டுபேருமாக மூழ்கினோம். அப்போது கண்ணை அகல விழித்துப் பார்த்தேன். பார்வதி பழைய பார்வதியாக இல்லை.

'போதும் ...... நாம் போகலாம்,' என்றேன்.

'ஏண்டா, அலுத்துப் போச்சா?'

'இல்லை ... நிஜமாகவே எனக்கு இப்போது பயமாக இருக்கிறது ... நீ பழைய பார்வதிஇல்லை, மாறிவிட்டாய்.'

'போடா...'

குடத்தை எடுத்துக் கொண்டு அவள் போன பிறகும், நெடு நேரம் அங்கேயே நான் உட்கார்ந்து துண்டை உலர்த்தித் தோளில் போட்டவாறு நான் கண்டதை எண்ணி எண்ணி ஏதும் புரியாமல் குழம்பியிருந்தேன்.

ஆனால் அந்த இருளில் எங்கள் குளியலை யார் பார்த்தார்களோ, செய்தி வீட்டை எட்டிவிட்டது.

'டேய், இதென்ன காரியம்? ...அவளை நீ கல்யாணம் செய்துகொள்ளப் போகிறாயா என்ன?' அவளுக்குத்தான் அந்தமாதவன் இருக்கிறானே தாலிகட்ட?' என்றாள் அம்மா.

'நான் தாலிகட்டினால்தான் அவளோடு குளிக்க வேண்டுமா?' திருப்பிக் கேட்டேன்

'அழகுதான்... பொல்லாப்பு வரும்டா சும்மா இரு.'

மறுநாள் பார்வதி ஜலம் எடுக்க வரவில்லை. பதிலாக மாதவன் வந்தான். என்னைப்பார்த்ததும் ஒரு முறைப்பு முறைத்தான்.

'நீ தாலி கட்டு. நான் வேண்டாம் என்று சொல்ல வில்லை. ஆனால் அவளும் நானும் சின்ன வயதிலிருந்தே இங்கே குளிச்சிருக்கோம். இப்பவும் குளிப்போம்... இது தப்பா மாதவா, ? என்றேன்.

அவன் பெருமூச்சு விட்டான்.

'சொல்லேன், இது தப்பா?'

அவன் குடத்தைத் தோளுக்கு மாற்றினான். 'டேய், என் வரையில் அது தப்பு இல்லேடா... ஆனா...' என்றான்.

'ஆனா என்ன?'

'ஊர் பலது பேசும்.

'ஊரை விட்டுத் தள்ளுடா'

'சரி. இங்கேயே இரு... பார்வதியை நான் அனுப்புகிறேன்.'

'மாதவா, நீயும் வாயேன்.'

'நானும் வருகிறேன். சரிதானே?

ஆகா, மூன்று பேருமாக ஜலப் பிரளயம் செய்தோம். பார்வதியின் ஒரு கையை நானும், ஒரு கையை அவனும் பற்றிக் கொண்டு அடித்த லூட்டி!... அப்பப்பா!

பௌர்ணமி வந்தது.

பார்வதி மட்டும் வந்தாள் அன்றைக்கு. வழக்கமான உற்சாகம் அவளிடம் தென்படவில்லை. அவள் விட்ட மூச்சுக் காற்று கொதித்தது. அடிக்கடி கையை உதறினாள்.

'என்னடீ? ஏன் என்னவோ போலிருக்கிறாய்?' என்றேன்.

அவள் பதில் சொல்லவில்லை.

'குளிக்கலாமா?'

பதில் இல்லை.

'உனக்கு என்னடீ வந்தது?'

முகத்தை நிமிர்த்தினேன். அவ்வளவு தான்.

'ஏண்டா இது தப்பா?' அவள் கேட்டாள்.

'இல்லை...' என்றேன் நான்.

'நான் அடுத்த வாரம் மதராஸ் போய் விடுவேன்.'

'ஏன்?'

'எனக்குக் கல்யாணம் ஆகப்போகிறது?'

'அப்படியா?'

'மாதவன்தான் மாப்பிள்ளை.'

'சந்தோஷம்... அவன் நல்லவன், பார்வதி.'

'நீயும் நல்லவன்தாண்டா... அதனால் தான் உன்னைவிட்டுப் பிரிய கஷ்டமாக இருக்கிறது. உனக்குக் கல்யாணமானால் என்மேல் வைத்திருக்கிற பிரியத்தை அவளிடம் வைத்திருப்பாயா?'

'உம்...'

கேட்டுவிட்டுப் போனவள்தான், அப்புறம் நெடுநாள் கழித்துத்தான் மீண்டும் அலமு வந்தபிறகு சந்தித்தோம்.

அந்த அன்பு—பார்வதி என்மீது வைத்திருந்தது – பரிசுத்தமானதென்பது அலமுவுக்கும் தெரியும். பாழாய்ப்போன அந்த அன்பு தன்னை சாரீரமாகத்தான் வெளிப்படுத்திக்கொள்ள வேண்டியிருக்கிறதோ' அதனால்தான் அது தப்பு என்று படவில்லை.

மனசும் சரீரமும் தனித்தனி இயக்கங்கள். மனசிலிருந்தும் சரீரத்திலிருந்தும் ஆன்மா தனிப்பட்ட இயக்கம்.

நாம் இந்த மூன்றையும் குழப்பிக் கொள்கிறோம்.

சரீர அவஸ்தைக்கு மனசு பொறுப்பு என்று குற்றம் சாட்டுவது பெரும்பாலும் நம் வழக்கமாகப் போய்விட்டது.

பார்வதிக்கும் எனக்கும் இடையே இப்படி ஏதாவது குற்றச் சாட்டுக்கு இடம் உண்டோ?

அலமு தலையைப் பலமாக ஆட்டி 'இல்லை' என்கிறாள்.

பழைய நினைவில் நான் இவ்வாறு ஈடுபட்டிருந்த போது, அலமு என் அருகில் வீற்றிருந்தவாறே சிரித்தாள்.

'என்னடீ?' என்றேன்.

'நம் சரீரம் மட்டும் இங்கே கிடக்கிறது. அது நகர்கிறது, உட்காருகிறது, பேசுகிறது, ஆனால் புறச் சூழ் நிலை அதைப் பாதிக்கவில்லை... என்ன நடந்தாலும் அதற்குக் கவலையே இல்லை...'

அடீ, இதுதானடி தேவசுகம்!... அமர நிலை என்பது இதுதான்... செத்த பிறகு தான் அது வரவேண்டுமோ?... நமக்கு இப்போதே அது வந்துவிட்டது, பார்த்தாயா?... நம்மால் எதிலும் ஈடுபட முடியும். ஆனால் விடுபட்டிருக்கிற நிலையிலேயே அந்த ஈடுபாடு உண்டாகிறது. கறை படாமல் இப்படி வாழமுடிகிறதே, இது அதிசயம் இல்லையா?'

இதமான காற்று வீசிற்று. பிசுபிசுவென்று மழைதூற ஆரம்பித்தது. அமுத பானம் செய்தவாறே நாங்கள் அங்கேயே வீற்றிருந்தோம். [ தொடரும் ]

அதிகரிக்கும் எதிர்பார்ப்புகளை உடைய காலமிது என்று தற்காலத்தைப் பற்றி அடிக்கடி சொல்லப்படுகிறது. கோரிக்கைகள், உரிமைகளின் வலியுறுத்தல், மேற்பரப்பிலேயே களன்றுகொண்டிருக்கும் வன்முறை, ஆகியவையாக இந்த எதிர்பார்ப்பு



# காந்தியும்

கள் உருவெடுக்கின்றன. இவையெல்லாம் எந்தவிதத்திலும் மாணவர் உலகிற்கு மட்டும் உரித்தானவை அல்ல. ஆனால், மாணவர்கள் தனி உரிமை படைத்த பிரிவினர், குறைகளை ஒலிக்கும் பிரிவினர் என்பதால் அவர்கள் சொல்வதும் செய்வதும் கவனத்தை இழுக்கிறது.

ஒத்துழையாமை நாட்களின்போது, பள்ளிக்கூடங்களிலிருந்தும் கல்லூரிகளிலிருந்தும் வெளியேறி கிராமங்களில் ஆக்கப்பணிகளில் ஈடுபட வரும்படி காந்திஜி தாமே மாணவர்களுக்கு அழைப்பு விடுத்தார். அல்லது, நாடெங்கிலும் அமைக்கப்பட்டு வந்த அரசாங்க சார்பற்ற தேசிய கல்வி நிறுவனங்களில் சேர்ந்து படிப்பைத் தொடருமாறு கூறினார்.

ஆனால், அரசாங்கம் அந்நியருடையதாக இருக்கும்போது பரவலான சட்ட மறுப்பு இயக்கத்தில் அனுமதிக்கப்படக்கூடியது என்ன என்பதற்கும், அரசாங்கம் நம்முடையதாய் இருக்கும்போது அனுமதிக்கப்படக்கூடியது என்ன என்பதற்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் உண்டு. காந்திஜி அறிவாளிகளுக்காகப் பரிந்து பேசியதில்லை. "பாமர மக்கள்" என்று தாம் கருதியோரிடமிருந்து தனிப்பட்ட ஒரு குழுவினர் அல்லது வர்த்தகத்தினர் என்றே காந்திஜி அவர்களைக் கருதினார். "வன்முறை எங்கெங்கு வெளிப்பட்டாலும் பாமர மக்களின் சார்பாக அது தோன்றுவதில்லை; வர்க்கத்தினரின் சார்பாகவே அதாவது அறிவாளிகளால் இயக்கப்படுவதாகவே அது தோன்றுகிறது" என்று 1934 ஆகஸ்ட் 3-ம் தேதியன்று ஒரு பத்திரிகையில் அவர் எழுதினார்,

காசியில் 1927-ல் மாணவரிடையே அவர் பேசுகையில் அவர்களை இடித்துரைத்தார். "இன்று நீங்கள் பெறும் கல்விக்கென இத்தகைய கல்விக்கு ஒருபோதும் வாய்ப்பில்லாத, பட்டினியால் வாடும் கிராமவாசிகள் நிதி கொடுக்கிறார்கள். வறியவரின் சக்திக்கு உட்பட்டதாயிராத ஒரு கல்வியைப்பெற மறுப்பது உங்கள் கடமை. ஆனால் இன்று அதைச் செய்யும்படி நான் உங்களை கேட்கவில்லை. வறியவருக்கென ஒரு சிறிய யக்ஞம் செய்து சிறிதளவு கைம்மாறு செய்யும்படியே நான் உங்களைக் கேட்டுக்கொள்கிறேன்" என்று காந்திஜி கூறினார்.

காந்திஜி இவ்வாறு சொன்னபோது செலவழிந்ததைவிட மாபெரும் அளவுக்குப் பொதுப்பணம் இன்று கல்விக்கென செல

# மாணவர்களும்



விடப்படுகிறது. நாலாம் திட்டகாலத்தில் கல்வித் துறைக்கென 809 கோடி ரூபாய் ஒதுக்கப்படவிருக்கிறது. இதில் 259 கோடி ரூபாய் மத்தியத் துறைக்கானது; 550 கோடி ரூபாய் ராஜ்யத்துறையைச் சேர்ந்தது. சமூகத்திற்கான முக்கியமாய் கிராம மக்களுக்கான இந்தக் கடனை எவ்வகையில் திருப்பிச் செலுத்துவது?

தமது கல்வி முறை ஒன்றின்படி காந்திஜி இந்தக் கேள்விக்கு விடை தரு

---

"ஒருமாணவன் ஒரே சமயத்தில் அரசியல் வாதியாகவும் பாடங்களை படிப்பவனாகவும் இருக்க முடியாது. — காந்தி

கிறர். அந்த முறையில், மாணவர்கள் சமுதாயத்திற்கொரு சுமையாய் இராமல், தங்களுடைய உழைப்பின் வாயிலாக சமூகத்திற்கு ஆக்கம் சேர்ப்பார்கள். ஆரம்ப கட்டத்திலேயே தமது ஆதாரக் கல்வி முறையைத் துவக்கவேண்டும் என அவர் கூறியதற்கு இந்த எண்ணம்தான் அடிப்படையாயிருந்தது. எல்லா மாணவர்களும் ஒரு வேலையைக் கற்றுக்கொண்டால், பள்ளிக்கூட நிலையிலிருந்தே அவர்களுடைய கல்வியில் தொழில் அம்சம் வலியுறுத்தப்பட்டால், இது பொது நிதிக்கு மாபெரும் மிச்சமாயிருப்பதோடு மட்டுமின்றி, உடல் உழைப்பின் கண்ணியத்தில் நம்பிக்கை வைத்துள்ளவர்களும் கல்லூரி நிலையில் உழைப்பு, உள்ளம், அறிவு ஆகியவற்றில் சிறந்தவர்களுமான இளம் தலைமுறையினர் உருவெடுப்பார்கள்.

அறிவாளிகளைக் காந்திஜி எதிர்த்தார் என்று சொல்வது சரியல்ல. ஆனால், வாழ்க்கையுடனும் உழைப்புடனும் ஒன்றியிராத கல்வி அவருக்குப் பிடிக்கவில்லை. சமூகத்தின்பால் தங்களுக்குள்ள கடனைத் திருப்பிச் செலுத்துவதற்கென மாணவர்கள் துடைப்பமும் கூடையும் ஏந்தச் சித்தமாயிருக்க வேண்டும், விடுமுறை முழுவதும் கிராம சேவைக்கானதாய் இருக்க வேண்டும். துப்பரவையும், எளிய சுகாதார விதிகளையும் கிராம மக்களுக்குக் கற்பிக்கலாம். கம்போஸ்ட் உரம் செய்யச் சொல்லிக் கொடுக்கலாம். பலவழிகளில் ஹரிஜனங்களுடன் தோழமை கொள்வதற்கும் இந்த நேரத்தைப் பயன்படுத்தலாம். கிராம மக்களுடன் தனி பிணைப்பு ஒன்றை உருவாக்கிக் கொள்வதற்கென்றே காதி திட்டம் வகுக்கப்பெற்றது.

இது தவிர, சமூக சேவைக்கென ஒவ்வொரு வாரமும் சிலமணி நேரத்தை ஒதுக்கிவைக்கலாம். இரவுப் பள்ளிக்கூடங்கள், மருந்தகங்கள் போன்ற தொண்டு திட்டங்களைத் துவக்கி நடத்துவதற்கென மாணவர்கள் தமக்களிக்கப்படும் தொகையிலிருந்து சிறிது ஒதுக்கி வைக்கலாம்.

கலகங்கள், ஆர்ப்பாட்டங்கள்போன்றவற்றின்போது வகுப்பு ஒற்றுமையைப் பராமரிக்கக்கூடிய அமைதிக் குழுக்களை ஏற்படுத்தி, மாணவர்கள், வகுப்பு வாதத்தை முறியடிப்பதற்கு நிறையச் செய்ய முடியும். கோராஜில்லாவில் சாதிவிருந்து ஒன்றில் கலந்துகொள்ள மறுத்த மாணவர்களைக் காந்திஜி பாராட்டினர். அந்தப் பகுதியில் உள்ள மற்றேருக்கு இது ஓர் எடுத்துக்காட்டாக அமையும் என்று அவர் நினைத்தார். தீபாவளி சமயத்தில் விளையாட்டுப்போட்டிகளுக்கும் சிற்றுலாக்களுக்கும் ஏற்பாடு செய்தும் வீடு பெருக்கியும் வெள்ளையடித்தும், மாணவர்கள் நல்லுதாரணமாய் விளங்க முடியும். மேறகூறிய செயல்களால் அவர்கள், இனிப்புகளுக்காகவும் வாணவேடிக்கைகளுக்காகவும் ஆகும் அமிதச் செலவுக்கு மாற்றளிககமுடியும். திருமணங்களில் ஆடம்பரத்தை இளைஞர்கள் அனுமதிக்கலாகாது சாதி, வகுப்புக் கலப்பு மணங்களுக்கு அவர்கள் முன்னேடிகளாய் விளங்கவேண்டும். சீதனத்தையோ, மாற்றுப் பொருள்களையோ ஏற்க இவர்கள் மறுக்கவேண்டும்.

இந்திய மொழிகள் காந்திஜிக்கு மிகவும் பிடித்தமானவை. அவற்றில் குறிப்பாக, இந்து—முஸ்லிம் ஒற்றுமைக்கு அடையாளமாக ஹிந்துஸ்தானியை அவர் பெரிதும் விரும்பினர். இது சம்பந்தமாக ஒரு நல்ல யோசனையை அவர் மாணவர்களிடம் கூறினர். தாங்கள் கற்பனவற்றை மாணவர்கள் தாய்மொழியில் ஆக்கி, கிராம மக்களுக்குத் தெரியப்படுத்தவேண்டும். மாணவர் விடுதிகளில் இருப்போர் ஒரு போதும் உணவை வீணுக்காமல் இருக்க வேண்டும்.

தேசிய உணர்வுபற்றி மாணவர்கள் அறிந்திருக்கவேண்டுமென காந்திஜி விரும்பினர். ஆனல், மாணவர்கள் அரசியலில் ஈடுபடுவதை அவர் பலமாக எதிர்த்தார். ‘ஒரு மாணவன் அரசியல் வாதியாய் இருக்கும் அதே சமயத்தில் படிக்கவும் முடியாது’ என்று காந்திஜி கூறினர். ‘மாணவர்களுக்கோ, அவர்களை ஏவிவிடுவோருக்கோ பயனில்லாத நோக்கங்களுக்கென மாணவர்களைக் கருவிகளாய்ப் பயன்படுத்திக்கொள்வதை நான் முற்றிலும் எதிர்க்கிறேன்’ என்றும் அவர் கூறினர். ‘அரசியல் பதவிபோட்டி மாணவர் உலகம் அறியாத ஒன்ருய் இருக்கவேண்டும். அதில் ஈடுபடும் தருணத்திலிருந்து அவர்கள் மாணவர்கள் அல்லர். எனவே, நாட்டிற்கு நெருக்கடி நேரிடும்போது அவர்கள் அதைக்காக்கத் தவறிவிடுவார்கள்’ என்று 1941-ம் ஆண்டு ஜனவரி 26-ந்தேதியன்று

★ பிச்சைக்காரர்கள் கேட்பதைக் கொடுக்கா விட்டால், அவர்கள் பட்டினி கிடக்கப் போவதாக பயமுறுத்துகிருர்கள். அல்லது பட்டினி கிடப்பதாக நடிக்கிருர்கள். இது நல்ல முறையில், நல்ல எண்ணத்தோடு மேற்கொள்ளும் உண்ணுவிரதம் அல்ல. இத்தகையோர் இப்படி உண்ணுவிரதம் மேற்கொள்வதன்மூலம் தங்களையே தாழ்த்திக்கொள்கிருர்கள். இவர்கள் பட்டினி கிடந்துவிட்டுப் போகட்டும் என்று விட்டுவிடுவதுதான் உரிய முறை.

— காந்தியடிகள்.

அனைத்திந்திய மாணவர் சம்மேளனத்தின் பொதுக் காரியதரிசிக்கு எழுதிய கடிதத்தில் காந்திஜி கூறினுர்.

"பாட்டாளிகளைப் போலன்றி மாணவர்கள் கல்வியறிவு பெற்றவர்கள். வேலை நிறுத்தங்கள் போன்றவை மூலமாக அவர்களுக்கு ஆக வேண்டியது ஒன்றுமில்லை. தொழில் அதிபர்களைப் போலன்றி, கல்வி நிறுவனங்களின் தலைவர்களுக்கும் மாணவர்களுடனுன பிணக்கினுல் ஆக வேண்டியது மேலும், ஒழுங்கிற்கோர் எடுத்துக் காட்டாய் விளங்க வேண்டுபவர்கள் மாணவர்கள். ஆகவே, மாணவர் வேலை நிறுத்தத்தினுல் தீவிர விளைவுகள் ஏற்படும். அசாதாரணமான சந்தர்ப்பங்களில் மட்டுமே இது நியாயமானதாகும்" என்றும் அவர் கூறினுர்.

"மாணவர்கள் தம்மிச்சையாகச் செயல்பட்டு, பலனற்ற ஆர்ப்பாட்டங்களில் தம் சக்தியை வீணுக்கினுல், நாட்டு நோக்கத்திற்கு ஊறு விளைவிப்பார்கள்" என்று அவர் 1940-ம் ஆண்டில் குறிப்பிட்டார். மாணவர் நடவடிக்கைகளில் காலித்தனம் வெகுஎளிதில் புகுந்துவிடக்கூடும் என்பதை காந்திஜி வெகு நன்ருய் அறிந்திருந்தார். அகிம்சை வழியை மாணவர்கள் கடைபிடிக்க வேண்டியதன் தேவைப் பற்றியும், காலிகளால் தாங்கள் இட்டுச் செல்லப் படுவதற்குப் பதிலாக காலிகளை அடக்க வேண்டியது குறித்தும் 1928-ம் ஆண்டிலேயே அவர் அறிவுறுத்தினுர்.

முதலாளித்துவத்தைக் குறைகூறி வர்க்கப் போராட்டம் பற்றிப் பேசிய மாணவரிடம் அவர் பேசுகையில், "கண்ணுடி வீட்டில் இருக்கும் நாம் மற்றவர்மீது கல்லெறியாமல் இருப்போம். எந்த அளவுக்குப் பாமர மக்களின் வாழ்வில் நீங்கள் பங்கெடுத்துக் கொள்கிறீர்கள்? என்னைப் பொறுத்த மட்டில் இது ஓர் ஆசையாகவே இருக்கிறது. முதலாளித்துவ பழக்க வழக்கங்கள் என்று நாம் குறிப்பிடுவனவற்றையே நாம் இன்னும் முற்றிலும் கைவிட்டப்பாடில்லை" என்று அவர் கூறினுர்.

நாட்டின் தேவைகளோடு ஒன்றியிராத கல்வி முறை, கல்வியறிவு பெற்ருேரிடையே வேலையின்மைக்கு வழி வகுத்துவிடும் என்பதைக் காந்திஜி முன்கூட்டியே அறிந்திருந்தார். எனவே, கல்வி முறையை மாற்றுவதே சிறந்ததாகும் என்று அவர் கருதினுர். ஆனுல், ஏற்கனவே கல்வியறிவு பெற்ற வேலையற்ருேர் இருந்தால் அதுபற்றி அவர் ஒரு யோசனையை வெளியிட்டார். வேலையற்ற பட்டதாரிகள் மாபெறும் அறிவூட்டும் இயக்கத்தில் ஈடுபட்டு, இதற்குப் பிரதியாக கிராம மக்களிடமிருந்து உணவு பெறுவது சிறந்ததல்லவா? என்று அவர் கூறினுர்.

மாணவியர்க்கும் காந்திஜி தெளிவான அறிவுறை வழங்கினுர். "உங்களுக்கு மணமாகியிருந்தாலும் ஆகாவிடினும் அடிமையாயிராதீர்கள். நாட்டிற்குத் தேவைப் படுவதைச் செய்யுங்கள். வெறும் அழகுப் பொம்மைகளாவதற்காக உங்கள் பெற்ருேர்கள் உங்களைப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பவில்லை". மாதர்களிடத்து நிரம்பியுள்ளதென அவர் கருதிய தீரத்திலும், தியாகத்திலும் சிறந்து விளங்கவேண்டுமென மாணவியரிடம் அவர் எப்போதும் வற்புறுத்தி வந்தார். ஒரு பள்ளிக்கூட சஞ்சிகையில் பழைய மாணவரின் திருமணங்கள்பற்றிய விவரங்களை அவர் பார்க்கையில், எந்த ஒரு பெண்ணும் சேவைக்கு மட்டும் தன்னை அர்ப்பணித்துக் கொண்டதாக ஒரு குறிப்புகூடகாணவில்லை என்ருர். மாதரின் சேவையுணர்வு குடும்பத்தைக்கடந்து, சமூக முழுமைக்குமான தாய் இருக்கவேண்டும் என்று அவர் எப்போதும் கூறி வந்தார்.

நாட்டு விவகாரங்களில் மாணவர்கள் செயலான பங்கு பெறுவதற்குக் காந்திஜி அன்று கூறிய யோசனைகள் இன்னும் பொருத்தமானவையாகவே உள்ளன. ✱



என் தந்தையார்

# வி. கிருஷ்ணசாமி அய்யர்

மனிதரின் ஞாபக சக்தி குறைவென்பது பொதுவாய் எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய விஷயம். அதிலும் துளியும் சரித்திர உணர்ச்சியை வளர்க்காத பரம்பரையில் வந்த நமக்கு ஒரு ஐம்பது ஆண்டுகள் கடந்து விட்டாலே ஒருவரைப் பற்றிய தகவல்களோ அல்லது ஒரு நிகழ்ச்சியைப் பற்றிய வரலாறோ பிசகின்றித் தெரிவதில்லை. காரணம் நம்முடைய சிரத்தைக் குறைவென்றேதான் முடிவு கட்ட வேண்டும்.

இந்திய சுதந்திரப் போர் தொடங்கி ஒரு அறுபது ஆண்டுகள் கழித்தே சுதந்திரம் நமக்குக் கிடைத்தது. அதிலும் மகாத்மாகாந்தி இந்திய இயக்கத்தின் தலைவராக ஏற்பட்டபின்னேதான் அரசியல் வேகமும் இயக்கத்தின் முதிர்ச்சியும் குறியை நோக்கி விறுவிறுப்புடன் சென்றன. ஆயினும் மகாத்மாவும், காங்கிரஸ் ஸ்தாபனம் என்றென்று வெகு காலமாய் அவருக்கும் முன்தொடர்ந்து அரசியலில் மக்கள் இதயங்களைப் பண்படுத்தி வந்ததால், இந்திய நாட்டில் அவர் காலை ஊன்றியவுடன் யோசனை எதுவுமின்றி தமது சத்தியாக்கிரப் போரின் உத்திகளைத் தலைவர்களிடம் பயன்படுத்த இயன்றது. ஆகையால், அரசியல் சரித்திரம் எழுதுகிறவர்கள், காங்கிரஸ் ஸ்தாபனத்தை வளர்த்து வந்த முந்திய பெரியார்களை மறக்காது, காந்தி இயக்கத்துடன் மட்டுமே இந்திய சுதந்திரப் போர் ஆரம்பித்ததாகக்காட்டாமல், அவருக்கு முன் உள்ள தலைமுறையின் உயர் பணிகளையும் தெரிந்தே காங்கிரஸ் இயக்கத்தின் வரலாற்றைக் குறிக்க வேண்டும்.

அவ்விதம் குறிக்கையில் கோகலே, மேதா, மாளவியா, சுரேந்திரநாதபானர்ஜி, வாச்சா, சென்னையில் வி. கிருஷ்ணசுவாமி ஐயர் முதலியவர்களின் ஞாபகங்களைக் குறைக்காமல் பாதுகாத்தல் அவசியம். சூரத் பிரிவின் விளைவால் மிதவாதிகள், தீவிரவாதிகள் என்றிரண்டு கட்சிகளாய்க் காங்கிரஸில் தோன்றியவர்களிடையே சச்சரவுகள் பலத்ததை, இன்று சிலர் மிதவாதக் கொள்கையின் சிறுமையின் பயனே அவ்வாறு நேர்ந்தது என்பர். கவனித்தால் மிதவாதிகளில் அன்றிருந்தவர்கள் இன்றுள்ள எந்தப் பெரியவர்களின் தைரியத்திற்கோ அல்லது தேசப்பற்றிற்கோ சளைத்தவர்களில்லை என ருசுப்படுத்தி விடலாம்.

மிதவாதிகளினால்தான் காங்கிரஸே 1917 வருஷத்திய அலங்கோலத்திற்குப் பிறகு பிழைத்தது எனலாம். அந்த நன்மைக்கும் அடிகோலியவர் ஓர் அளவு சென்னை பிரமுகரான என் தந்தையாரே. காங்கிரஸ் கூட்டத்தை 1908ஆம் ஆண்டில் மிக்க வன்மையுடன் சென்னையிலேயே நடத்தித் தந்தவர் அவர்தாம். அவர் மட்டும் இல்லாதிருந்தால் என்ன கதி காங்கிரஸுக்கே ஏற்பட்டிருக்குமோ என்று கோக்கலே, வாச்சா இருவரும் அடிக்கடி கூறுவார்களாம். இதற்கு அத்தாட்சிகள் அவர்கள் எழுதிய கடிதங்களே. மேலும், சென்னையில் டிசம்பர் மாதத்தில் காங்கிரஸ் கூட்டத்தை நிறைவேற்றுவது என்ற தீர்மானத்தை விஷயாலோசனைக்குழு ஆகஸ்டு மாதத்தில்தான் முடிவு செய்தது. மூன்றே மாதங்கள் இடையில் இருந்தனவாம். தமது பேராற்றலைக்கொண்டு என் தந்தையார் சென்னையில் நடத்தப்படவேண்டிய கூட்டத்திற்கு சகல ஏற்பாடுகளையும் செய்ததுடன், கூட்டம் வெற்றியுடன் முடிந்த பிறகும் வரவு செலவு கணக்கு முதலியவைகளையும், காங்கிரஸ் நிகழ்ச்சிகளின் அறிக்கையையும் வெகு சீக்கிரம் தயாரித்து மூன்று மாதங்களுக்

குள் காங்கிரஸ் அங்கத்தினர்களின் கையில் கிடைக்கும்படி செய்தார். வாச்சா பல ஆண்டுகள் காங்கிரஸ் காரியதரிசியாக இருந்த அனுபவம் பெற்றவர். அவரே வியந்தார் என்றால், சென்னை நிர்வாகத்தின் திறமையைப் பற்றியும் அதைச் செவ்வனே செய்த பெரியாரைப் பற்றியும் பெருமைப்படாது எவ்விதமிருக்க முடியும்?

வி. கிருஷ்ணசுவாமி ஐயர் நாட்டு நலனை மட்டுமே குறிவைத்து உழைக்காதவர்; சொந்தத்தில் வழக்கறிஞராய், சம்பாத்தியம் வெகுவாய்க் குவித்தவராயிற்றே என்று சிலர் எண்ணலாம். ஆம், உண்மை; சம்பாதித்ததைக் கணக்குப் பார்த்துப் பாங்கியில் பத்திரப்படுத்தியவரா அவர்? இல்லையே! முழுகிய அர்பத்நட்டு பாங்கியின் அதிகாரியைக் கிரிமினல் வழக்கிற்கு எப்படியாவது ஆளாக்குவதன் பொருட்டு அவர் அவனைக் குறுக்கு விசாரணைகளால் திணர அடித்ததைக் கதை கதையாகச் சொல்லுவார்கள் அந்தக்காலத்தியவர்களில் பலர்.

அதனுடன் நில்லாமல், தம் முயற்சியின் விளைவாய் இந்தியன் பாங்கு லிமிடெட் என்றுள்ள சிறந்த ஸ்தாபனத்தைத் தொடங்கவும் அவரே பாடுபட்டார். ஒரு பக்கம், தொழில் அலுவல்கள் சதா அவருக்கு; மற்றொரு பக்கம் பல துறைகளில் கண்ணோட்டம் இட்டு எங்கெங்கு எவை எவை சீர்படுத்தப்படவேண்டியவையோ அவை அவைகளைச் சீர்படவைக்கவும் முயன்றவர்.

அவருடைய மனத்தின் வேகமும், கற்பனை சக்தியும் எவ்வளவு சிறந்தவை! ஒன்றிரண்டு அத்தாட்சிகளைக் காண்பிப்பது பொருத்தமல்லவா?

சென்னைக்குக் காந்தி என்ற நாமமே தெரியாத காலம் 1910 ஆம் ஆண்டு. காங்கிரஸ் தலைவர்களில் முக்கியமான சிலரே அவருடைய தென் ஆப்பிரிக்கா இயக்கத்தைப்பற்றி அறிவார்கள் அக்காலத்தில். 1910 ஏப்ரல் மாதத்தில் எச். எஸ். எல். போலக் (H. S. L. Polak) என்ற காந்தி அடிகளின் தென் ஆப்ரிக்கா இயக்கத்தின் சகபாடி, சென்னைக்கு வந்தார். சென்னையில் என் தந்தையார் அச்சமயம் ஹைகோர்ட்டு ஜட்ஜ்பதவியில் அமர்ந்திருந்தார். பேட்டிகாண வந்தவரை, என் தந்தையார் மார்பைக்கூட ஆடையால் மூடிக்கொள்ளாது சாவகாசமில்லாமல் தான் தமது அறையில் வரவேற்றார். மேலும் துளியும் சங்கோசமின்றி வந்தவரிடம் "ஐயா" எங்கள் பழக்கம், எங்கள் அரசனை மரியாதையுடன் வரவேற்பதானாலும் இம்மாதிரிதான் மேல் அங்கியையும் இடுப்பில் சுற்றிக்கொண்டு வரவேற்பது எங்கள் உபசார தோரணை. ஆகையால், என் மார்பை நான் வஸ்திரத்தால் மூடாமல் உங்களைக் கரங்குவித்து அழைப்பதை மன்னிக்கவும் என்றாராம்.

வந்தவர் காந்தி அடிகளைச்கண்டு வியந்தவர். களங்கமில்லாத இவ்வார்த்தைகளைக் கேட்கவும் அவைகளைவிட தமக்கு உபசாரம்வேறுநேர்த்தியாய்இருக்கமாட்டா என்றே நினைத்தாராம்.

பிறகு இருவரும் கெல்லெட் ஹாலில் (Kellet Hall) பிரசங்கங்கள் செய்தார்கள். ஏப்ரல் 28-ஆம் தேதி கிருஷ்ணஸ்வாமிஐயர் தலைமையில், போலக் "காந்தியும், டிரான்ஸ்வால் இயக்கமும்" என்பதைப் பற்றிப் பேசினார். அவர் சொற்பொழிவை மிகவும் கவனமாய்க் கேட்டவர் என் தந்தையார். தமது முடிவுரையில் பேசுகையில் சொன்னார், "காந்தியைப் போன்ற ஓர் சுத்த

---

**Statement about ownership and other Particulars of the Shivaji**

Form IV

**( See Rule No. 8 )**

| | |
|---|---|
| 1. Place of Publication | : Tiruchirapalli-2. |
| 2. Periodicity of its publication | : Monthly |
| 3. 4 & 5, Name of the Printer, Publisher and Editor | : Triloka Sitaram, |
| Nationality | : Indian. |
| Address | : 2-A, Fort Station Road, Tiruchirapali-2. |
| 6. Name and address of the individual who own the newspaper | Triloka Sitaram, 2-A, Fort Station Road, Tiruchirapali - 2. |

I, Triloka Sitaram heraby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Tiruchirapalli-2, March 15, 1969.

(Sd) **Triloka Sitaram**
Publisher.

ஆத்மாவை இந்நாடு பெற்றெடுத்ததற்கு நாம் கடவுளுக்குக் கைம்மாறு செய்யக் கடமைப்பட்டுள்ளோம். அவர் அரியதேசத் தொண்டர் மட்டுமல்ல. பெரிய தத்துவ ஞானியும். இன்று ஆப்பிரிக்காவில் அவர் செய்யும் போரின் விளைவு எதுவாயினும், ஒன்று மட்டும் நிச்சயம்; வரும் சந்ததிகள் போற்றக்கூடிய, இதுவரையில் அறியாத விதம் நிரந்தரமான பெயரை அவர் நிலை நாட்டுவார் என்பது திண்ணம்''.

1910 ஆம் ஆண்டில் மகாத்மா என்ற சிறப்புப் பெயரையே அவர் பெறுதபொழுது ஒருவர் முன்கூட்டியே அவர் அடையப் போகும் கியாதியைப்பற்றி அவர் சொன்ன தின் தெளிவும், தீர்க்க தரிசனமும் வியக்க வேண்டியவை.

மற்றொரு சம்பவம். மகா கவி சுப்பிர மணிய பாரதியை, பலர் போற்றுவதற்கு முன், அரசியலில் தமக்கு எதிர்க்கட்சியில் இருப்பவரின் கவிதைத்திறனைக்கண்டு மிகவும் பாராட்டி, அவருக்கு வேண்டிய தான கவிதைத் தொகுதியொன்றை அச்சிட்டு ஆயிரக்கணக்கான பிரதிகளையும் இலவசமாய் ஜனங்களிடையே வாரி வழங்கு வதற்குவேண்டிய பேராற்றல் ஒருவரிடம் காணப்பட்டால் அதை இன்று எப்படிக் கவனியாது தள்ளமுடியும்? ஆம், பாரதி யாரே என் தந்தையைப்பற்றி ஆங்கிலக் கட்டுரையொன்றில் 1918 ஆம் ஆண்டில் புகழ்ந்துள்ளார் என்றால், எவ்வளவு என் தந்தையாரிடம் உயர்நோக்கங்கள் மலிந் திருந்தன என்பது விளக்கம் பெறுகிறது.

பார்ப்பதற்கு அதிக உயரமில்லாவிட் டாலும், அவருடைய நிமிர்ந்த தலையும் ஏறுபோன்ற நடையும் எதிர்ப்பட்டவர் களின் இதயங்களைக் களவாடிவிடும். பேச்சு வேகமா, அல்லது காரியம் வேகமா என்றே போட்டி இடும். அவரிடம் வாய் வெடிகள் எவ்வளவோ வெளிவரினும், அவரிடம் இதயம் பாகாய்க் கனிந்துருகும். தைரியத்தைப் பிறரிடம் ஊட்ட அவர் நாடிய வழி, தம்மை எதிர்த்து நல்லதாய் எவன் வாதாடினாலும் அவனிடம் மதிப்பை உடனுக்குடனே காட்டுவதுதான்.

ஒருசமயம் ஜட்ஜ் பதவியைவிட்டு நீங்கி கவர்னர் நிர்வாக சபையின் அங்கத் தினராய் அவர் ஆனார். அச்சமயம் தம்மைப் பற்றி வக்கீல்கள் என்ன நினைத்தார்கள் என்றறிய, பல தலைவர்கள் இருந்த இடத் தில் கேட்டாராம். ஒருவரும் அவரிடம் குறைகூறவில்லை. சிறுவரான ஒருவர், அவரிடமே ஆபீசில் தொழில்முறை கற்ற வர் சொன்னாராம். ''நீதிஸ்தலத்தில் ஜட்ஜ் பதவியில் நீங்கள் இருக்கையில், வாதாடும் வழக்கறிஞர்களைப் பேச வொட்டாமல் அடித்தீர்கள்'' என்று. அவ்வளவுதான், அங்குள்ள பெரியவர்கள் இதைக்கேட்டுப் பயந்தேபோனார்கள்.

ஆனால் என் தந்தையார் இளைஞரைப் பார்த்து ''மற்றவர்கள் சொல்லச் சங்கோ சப்பட்டாலும், நீ தைரியமாய்ச் சொன்ன தற்கு உனக்கு என் ஆசிகள்'' என்றாராம். பிற்காலத்தில் நீதிபதி பதவியில் வெகு காலம் வேலைபார்த்த ஸ்ரீ என். சந்திரசேகர ஐயரே அன்று பேசிய இளைஞர்.

இன்று இம்மாதிரியான பல செய்தி களை நாம் அறிவதால் உயர்வு எய்துகிறோ மல்லவா?

— கி. சந்திரசேகரன்

# சிந்தனைச் சிதர்

★ எல்லா சமயங்களும், உண்ணாவிரதத்தை ஒரு சிறந்த ஒழுங்குக் கட்டுப்பாடு முறை யாகக் கருதுகின்றன. தாங்களாகவே முன் வந்து உண்ணாவிரதத்தை மேற் கொள்பவர்கள், அதன் பலனாக அமைதி யும் தூய்மையும், பெறுகிறார்கள்.

★ மிருகத்தனமான உணர்ச்சியை அடக்கு வதற்கு உண்ணாவிரதம் உதவிபுரியும். ஆனால், சுபக்கட்டுப்பாடு நோக்கத்துடன் தான் உண்ணாவிரதத்தை மேற்கொள்ள வேண்டும்.

★ தூய்மையான உண்ணாவிரதம், மிகவும் மிகவும் சக்தி வாய்ந்த வழிபாடு ஆகும். லட்சக்கணக்கான மக்கள் தாங்களாகவே முன்வந்து உணவருந்தாமல் இருப்பது சிறிய விஷயம் அல்ல. இத்தகைய உண்ணாவிரதம்தான் சத்தியாக்கிரக முறையிலான உண்ணாவிரதம். இது தனி நபர்களையும் நாடுகளையும் சிறப்பிக்கிறது.

— அண்ணல்

# என் தந்தை

தொடர்ச்சி : 1

பாரதியாரின் புதல்வி
— ந. சகுந்தலாபாரதி

''எந்தாய்! நீதந்த
இயற்பொருள் எல்லாமிழந்து
நொந்தார்க்கு நீயன்றி
நோவழிப்பார் யாருளரே?'' — பாரதி

1940-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 11-ந் தேதி அவர் இறந்தநாள் பாரதி தினமாக் கொண்டாடப்பட்டதை இரண்டாயிரம் மைல்களுக்கப்பாலுள்ள நான் ரேடியோ மூலமாகக் கேட்டேன். அவரது கவிதைத் திறமையை, அவர்தன் உயரிய தேசபக்தியை, ஜனங்கள் அறிந்து பக்தி செலுத்துகிருர்கள். ஆனால், அவர் தம் கவிதையின் மூலமாக தம் கருத்துக்களை வெளியிட முடியாமல் கட்டுண்டு கிடந்ததை நினைந்து மனம் நொந்து மருகியதை யாரறிவார்?

அவர் ஓர் க்ஷத்திரியனைப்போன்று வீர மரணத்தை விரும்பினர்! ''போர் முனையிலே முன்னணியில் நிற்பேன். துண்டிக்கப்பட்டு விழுந்த என் சிரசைப் பல்லக்கில் வைத்துக் கொணர்வார்கள் செல்லம்மா! அப்போது ஜனங்கள் உனக்கு சேனைத்தலைவனுடைய மனைவிக்குரிய மரியாதை செய்வார்கள்,'' என்பார். ''நரை கூடிக் கிழப்பருவமெய்திக் கொடுங்கூற்றுக்கிரையெனப் பின்மாயும் பல வேடிக்கை மனிதரைப்போல நான் வீழ்வே னென்று நினைத்தாயோ?'' என்று பராசக்தியிடம் ஒவ்வொருநாளும் ஸ்நானம் செய்யும் போது கோபத்துடன் கேட்பதுபோலப் பாடுவார். சிறு குழந்தையான என் மனதில் அவரது வார்த்தைகள் பசுமரத்தாணிபோலப் பதிந்தன.

என் தகப்பனுரைப்பற்றி என் நினைவுகளையும் எழுதலாமென்று எண்ணி ஆரம்பித்தேன். எதிலிருந்து தொடங்குவது?

''ஒடித்தவறி உடைவனவாம் சொற்களெலாம்,
கூடி மதியிற் குவிந்திடுமாம் செய்தியெலாம்.''

எனக்குப் பொழுதுபோவதற்காக எண்ணற்ற கதைகள் சொல்லுவார். தமிழ்க்கதைகள் முடிந்துவிடும். பஞ்சதந்திரம், மற்றும் சமஸ்கிருதக்கதைகள், 'லாபோந்தேன்' எழுதிய பிரெஞ்சுக்கதைகள். அவைகளும் முடிந்துவிடும். புதிய புதிய கதைகள், அப்போதைக் கப்போது கற்பனை செய்துகூடச் சொல்வார். நட்சத்திரக் கதைகள் கடலைகதைகள் எனப் பல பல.

என் தந்தையிடம் நான் விளையாட்டுப் பொருள்கள், பொம்மைகள் கேட்டது கிடையாது. புதிய புதிய கதைகள், பாட்டுகள் இவைதாம் அவர் எனக்குக் கொடுக்கும் பரிசு. ஒரு பழைய கருப்புத் தகரப்பெட்டி, அதில் அவருடைய கையெழுத்துப் பிரதிகளும், பத்திரிகைகளிலிருந்து வெட்டி ஒட்டப்பட்ட வியாசங்களும் அடங்கியிருக்கும். அவற்றை எங்களுக்கு லட்சரூபாய் ஆஸ்தி என்று சொல்வார். உண்மைதானே!

சாதாரணமாக, குழந்தைகளுக்கு தாய் தந்தையிடம் மிக்க அன்பு இருக்கத்தான் செய்யும். ஆனுல், நான் அவரிடம் கொண்டிருந்த அன்பு, மதிப்பு, பக்தி எல்லையற்றது. ''அண்ணன் ஒருவனை அன்றியே புவி யத்தனைக்கும் தலையாயினேனும் என்னும் எண்ணம் மனதிடைக் கொண்டவன்'' என்று பாஞ்சாலி சபதத்தில் துச்சாதனனை அவர் வர்ணிப்பதைப் போல, எனக்கு அவர் ஏது கூறினுலும் என்ன சொன்னுலும் வேதவாக்கு என்ற நம்பிக்கை.

எனக்குத் தந்தையிடம் மிக்க சலுகை உண்டு. அதனுல், ஒருநாள், என்தாயார் சொல்லியதைக் கேளாமல் மறுத்துரைத்தேன். ''தாய் சொன்ன சொல்லைத் தட்டாதே, பாப்பா'' என்று பாடினுர். நான் செய்ய வேண்டியதற்கெல்லாம்ஒருபாட்டுஇப்பொழுது எழுதிக்கொடு' என்று கேட்டேன். உடனே 'பாப்பா பாட்டு' எழுதிக்கொடுத்தார்.

முதன் முதலாக எனக்கு என்தந்தை கதை சொல்ல ஆரம்பித்த சம்பவம், மூன்று வயதாக இருந்தபொழுது நிகழ்ந்தது. அதன் விவரம் என் தந்தையார் சில ஆண்டுகளுக்குப் பிறகு

தமது உற்ற நண்பர் ஒருவரிடம் சொல்லியதை அப்படியே எழுதுகிறேன்.

"செல்லம்மாவுக்கு உடம்பு குணமில்லை. வைத்தியர் புதுவை நகரிலுள்ள ஆர்டிஷன் வெல்ஸ் நீரூற்றில் தினமும் ஸ்நானம் செய்தால் நல்லது என்று சொன்னார். அதிகாலையில் வேலைக்காரி அம்மாக்கண்ணுவைத் துணைக்கு அழைத்துக்கொண்டு நீரூற்றில் ஸ்நானம் செய்வதற்காக செல்லம்மா போய் விட்டாள். குழந்தை, பாப்பா தூங்கிக்கொண்டிருந்தது. 'குழந்தை விழித்தவுடன் வெங்கலச் செம்பில் மூடிவைத்திருக்கும் பாலை அதன் பக்கத்தில் வைத்திருக்கும் சின்னக் கெண்டியில் விட்டு பாப்பாவுக்குக் கொடுங்கள்' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாள். நானும் சரி என்று ஒப்புக்கொண்டேன். ஆனால் நேரமாக ஆக எனக்கு ஒரு சந்தேகம் தோன்றி வளர்ந்துகொண்டே வந்தது. குழந்தை எழுந்து அம்மாவைக் காணோம் என்று அழுதால் என்ன செய்வது? நமக்கோ குழந்தையை சமாதானப்படுத்த வழி தெரியாது. இதுவரை இதுமாதிரி ஒரு சங்கடமான நிலைமை ஏற்பட்டதில்லை. குழந்தை சந்தோஷமாகச் சிரித்து விளையாடும்போது எடுத்து முத்தமிட்டு மகிழ்ந்ததுண்டு. சரி பார்ப்போம். குழந்தை அழுதால் எடுத்துக்கொண்டு போய் முருகேசப் பிள்ளை வீட்டில் அண்ணியம்மாளிடம் கொடுத்து விடுவோம். நல்ல வேளையாக அவர்கள் வீடு மிகச்சமீபத்தில் இருக்கிறது".

"இப்படியாக நான் யோசித்துக்கொண்டிருக்கும்போதே அந்த அற்புதம் நிகழ்ந்தது. பாப்பா கண்ணை விழித்தது. என்னைப் பார்த்துப் புன்னகை செய்தது. நான் உடனே சந்தோஷத்தோடு "பாப்பா கண்ணே! உனக்குப் பால் வேண்டுமா?" என்று கேட்டேன். வேண்டும் என்று சொல்லிற்று. கெண்டியில் பாலை ஊற்றி, பாப்பாவை மடியில் எடுத்து வைத்துக்கொண்டு குழந்தையின் கையில் கெண்டியைக் கொடுக்கப்போனேன். பாப்பா கலீர் என்று சிரித்தது. பாப்பா சொல்லுகிறது. "கெண்டியை நான் தொடக்கூடாது. கைசுடும். நீ கெண்டியைப் பிடித்துக்கொள்" என்றது. பால் சாப்பிட்டாயிற்று. பிறகு என்ன செய்வது? "பாப்பா உனக்கு நான் ஒரு பாட்டுப் பாடட்டுமா?" என்று கேட்டேன். பாப்பா மறுபடி சிரித்தது "பாட்டு, தூங்கப்பண்ணும் போது பாடவேண்டும். இப்போது பேசு" என்றது. என்ன பேசுவது? குழந்தையிடம் எதைப்பற்றிப் பேசுவது? ஒருகணம் யோசித்தேன். அதற்குள் பாப்பாவே விடை கண்டு பிடித்துவிட்டது. "அப்பா! கதை சொல்லு" என்றது."

மூன்று வயதிலிருந்து ஏழு வயதுவரை நாலு வருஷங்கள் அப்பா கதைகள் சொன்னார். ஏழுவயதில் நான் தனியே தமிழ் நாவல் படிக்க ஆரம்பித்துவிட்டேன். அப்பா சொன்ன கதைகள் அவற்றில் சில அவராலேயே எழுதப் பெற்று பத்திரிகைளில் வெளிவந்திருக்கின்றன. ஆனால் அப்பா சொன்ன அபூர்வமான கதைகள் எத்தனைஎத்தனையோ உள்ளத்தினடியில் எங்கோ புதைந்து மறைந்து கிடக்கின்றன. என்றோ ஒருநாள் அவை மனதின் அடிவாரத்திலிருந்து, மேலே மறைத்திடும் எண்ண அலைகளைக் கிழித்தெறிந்து மூடியிருக்கும் மறதியைக் களைந்து வெளியில்வரும்.

மண்ணின் அடியில் புதைந்து போன புராதனச் சின்னங்களைத் தேடிக் கண்டுபிடித்து அவை சொல்லும் அதிசயக் கதைகளையெல்லாம் அறிஞர்கள் கண்டுபிடித்து நமக்குத் தருகிறார்கள் அல்லவா? அதுபோல என் தந்தையாரின் கற்பனைக் கதைகளும் தமிழ்நாட்டுக் குழந்தைகளுக்குக் கிடைக்கக் கூடும். அப்பா கதை சொல்லுவார். ரோஜாப்பூமாலையும் எலுமிச்சம் பழமும் வாங்கிக்கொண்டு வந்து அப்பாவைக்காண சில அன்பர்கள் வருவார்கள்.

அவர்கள் வீடு திரும்பிய பின் அன்றைக்குக் கதையில் ரோஜாப்பூவும் எலுமிச்சம் பழமும் பேசும். அந்தக்காலத்தில் வாழ்ந்திருந்த மனிதர்களின் பழக்க வழக்கங்களைப் பற்றி அவை கதைபேசும். அந்தக்கதையிலிருந்து அப்பாவின் உள்ளம் ஒரே தாவாகத்தாவி நாட்டின் சரித்திரத்தின் மீது பாயும். ரோஜாப்பூவிலிருந்து அத்தர் பிறந்த கதை, பின் மொகலாயச் சக்கரவர்த்திகள் தமிழ் நாட்டை ஆண்ட கதைகள் இப்படி எத்தனையோ கதைகள். நம் நாட்டிலுள்ள பாஷைகளில் தந்தையாருக்குத் தெரிந்திருந்த பாஷைகள் அனைத்திலும் அவர் படித்திருந்த எண்ணற்றகதைகள் தவிர, ஆங்கிலத்திலும் பிரஞ்சு பாஷையிலும் அவர் படித்திருந்த கதைகள்

அப்பா கதை சொல்லுவதில் எந்தக் தேசத்துக் கதையாய் இருந்தாலும் அதையெல்லாம் அவர் சொல்லி முடிக்கும்போது நமது பாரத நாடு அன்னியர் ஆதிக்கத்தின் கீழ் அவலமடைந்திருந்த நிலையை விளக்கும் ஒரு உதாரணமாவது ஒரு சொற்றொடராவது அதில் இல்லாமற்போகாது. நண்டு வளை தோண்டும் கதையாய் இருந்தாலும் சரி, நட்சத்திரக் குவியலின் கதையாய் இருந்தாலும்சரி அதில் பாரத நாடு சுதந்திர மடைய வேண்டுமென்ற கருத்து கலந்தே இருக்கும்.

என் தந்தையார் தம் தேசத்தின் மீதுள்ள அன்பிற்கு அடுத்ததாக என்மீது பிரியம்செலுத்தினர். சிலர், 'பாரதி, மனைவி மக்கள்மீது பற்றற்று சன்யாசிபோல் வாழ்ந்தார்' என்று சொல்வதைக் கேள்விப்படுகிறேன். அது முற்றிலும் தவருனது. காசாசையும் சுய நலமும் கொண்டு தன் மனைவி மக்களுக்குப் பொருள் சேர்ப்பதையே நோக்கமாகக் கொண்டுள்ள மனிதர்களின் கணக்குப்படி வேண்டுமானல் அவர் சம்சாரத்தில் பற்றற்றிருந்ததாகக் கொள்ளலாம். என் தந்தை எங்கள்மீது வைத்திருந்த அன்பு சுயநல மற்றது, களங்க மற்றது. எல்லையற்றது,

எனக்கு ஐந்து வயதாக இருக்கும்போது ஒருசமயம் கடுஞ்சுரநோய்கண்டது. காய்ச்சலின் வேகத்தால் நாக்குழறிவிட்டது. என் தந்தையின் உண்மை சிநேகிதருள் ஒருவரும், என் வளர்ப்புத் தந்தையாக நான் கருதியவருமான ஸ்ரீ பொன்னுமுருகேசம்பிள்ளை என்னைப் பார்க்க வந்தார், என் தந்தை, 'பாப்பா, யார் வந்திருக்கிருர்கள், பார்' என்ருர். முருகேச பிள்ளை என்று சொல்ல எண்ணிய எனக்கு, சுர வேகத்தால் நாக்குழறிப் போயிற்று. 'முருகேழ பிள்ளை' என்று சொன்னேனும். என் தந்தை சுவற்றில் மோதிக்கொண்டார், புலம்பினர். 'பாப்பா, நீ கடற்கரை மேடையிலிருந்து சிங்கம் கர்ஜிப்பதுபோலப் பிரசங்கம் செய்யப்போகிருய் என்று எண்ணியிருந்தேனே! என்ன குற்றம் செய்ததினல் குழந்தைக்கு இக்கதி நேர்ந்தது? தாய் தந்தையரின் செய்கைகள் மக்களைப் பாதிக்கின்றன. சரீர வாதனையைத் தான் அனுபவிப்பதைவிடத் தன்னில் இனியார், தம்மக்கள் அனுபவிப்பதைப் பார்ப்பது பதின்மடங்கு கொடியது. நான் என்ன குற்றம் செய்தேன்? என்னிடமுள்ள கெட்ட பழக்கம் நான் புகையிலை போட்டுக்கொள்வது ஒன்றுதான். அதையும் இன்றுடன் விட்டேன், என்று சபதங்கூறினர். காய்ச்சல் 'டைபாயிட்' சுரமாதலால் குணமாக மூன்று மாதமாயிற்று. கொஞ்சம் குணம் தெரிந்தவுடன் எழுதிய பாட்டுத்தான்,

" பக்தியினலே — இந்தப்
பாரினில் எய்திடும் மேன்மைகள் கேளடி ! "

என்ற பாட்டு.

' இந்தப்புவிக்கே-இங்கோர் ஈசனுண்டாயின்
அறிக்கையிட்டேனுன்றன
கந்தமலர்த்தாள்-துணை காதல் மகவு
வளர்ந்திட வேண்டும் என் சிந்தையறிந்தே
அருள் செய்திடவேண்டும்'
என்ருல் அருளெய்திடும்.
(பக்தியினலே)

எனக்கு வயது ஏழு, எட்டு இருக்கும். எங்கள் வீட்டில் ஸ்வாமி விவேகானந்தரின் பிறந்தநாள் கொண்டாடுவது வழக்கம். முதன் முதலாக, அப்பா எனக்குப் பிரசங்கம் செய்யக் கற்றுக்கொடுக்கும் பொருட்டு ஸ்வாமி விவேகானந்தருக்கு வணக்கமும் விவேகானந்தர் சரித்திரத்தின் சுருக்கமும் எழுதிக்கொடுத்துப் படிக்கும்படி செய்தார். ராமகிருஷ்ணரின் சரித்திரம், தேவி நிவேதிதாவின் சரிதை இவற்றைச் சிறிய கதைகள் போல எனக்குச் சொல்வார்.

விபின சந்திர பாலர் 1907ம் ஆண்டின் தொடக்கமாதங்களில் திருவல்லிக்கேணிக் கடற்கரையில் பேசியதை நான் நேரில் கேட்டிருக்கிறேன். அப்போது அயல்நாட்டில் செய்த துணிகள் — முக்கியமாக வெல்வெட் குல்லாய்கள் — கடற்கரை மணலில் மூட்டிய தீக்கு இரையாயின. நாங்கள் அப்போது ஹஸ்ஸான் குல்லாய் என்ற கம்பளிக் குல்லாய் களே அணிந்து அங்கே செல்வோம். அந்நாளில் தலையில் குல்லாயோ தலைப்பாகையோ அணியாமல் மெரீனு பேவ்மெண்டில் உலாவக் கூடாது.

1907ம் ஆண்டு, என்று நினைக்கிறேன்; ஸ்ரீ விபின சந்திரபாலரை வேண்டி சென்னைக்கு அழைத்துவரும் பொருட்டு அப்பா கல்கத்தாவுக்குச் சென்றிருந்தார். அப்பொழுது அங்கு ஸ்ரீ நிவேதிதா தேவியைக்

கண்டு வணங்கி அவரிடம் சம்பாஷித்துக் கொண்டு இருக்கும்போது, தேவியார், 'மகனே, உனக்குத் திருமணம் முடித்தாயிற்ரு?' என வினவினுராம். என் தந்தை, தமக்கு விவாகமாகி ஒரு பெண் குழந்தையும் பிறந்திருப்பதாகச் சொன்னுராம். தேவியார்; 'அப்படியானுல் என்னைக் காண்பதற்கு நீ ஏன் உன் மனைவியை அழைத்துவரவில்லை?' என்று கேட்டார். 'சென்னையிலிருந்து நான் மட்டும் தான் கல்கத்தா வந்திருக்கிறேன். தேசீய காரிய நிமித்தம் வந்ததால் மனைவி மக்களை அழைத்துவரவில்லை' என்ருர். உடனே தேவியார் 'மகனே, நீ போகுமிடத்திற்கு உன் வலதுகரம் இல்லாமல் போவாயா? யாது வேலையாயினும் உன் தர்மபத்தினியை உடனழைத்துப் போவதுதான் சரி. அதுதான் கிரஹஸ்தாச்ரமத்திற்கு உகந்தது' என்ருர். ஸ்ரீ நிவேதிதா தேவியார் தாம் இமயமலைக்குச் சென்றிருந்தபோது அங்குள்ள மரத்தின் இலையொன்றைத் தம் ஞாபகார்த்தமாக அளித்திருந்தார். அதை என் தாயார் தம் நகை (இல்லாத) பெட்டியில் வைத்திருந்தார்.

சிறு வயதில் எங்களுக்குத் தெய்வ பக்தியைப்பற்றிப் பலவாறு உபதேசம் செய்வார். மற்றும் அவரைக் காணவரும் நண்பர்களுக்கு உபதேசம் செய்வதையும் சிலரோடு தர்க்கம் செய்து வென்று அவர்களுக்குத் தன் பக்தி வழியைப் போதிப்பதையும் பலமுறை கேட்டிருக்கிறேன். அவரவர் தம் விருப்பத்திற்கிணங்க கடவுளை எந்த ரூபத்தில் வேண்டுமாயினும் வணங்கலா மென்பதே அவர் கொள்கை. எங்கள் வீட்டில் முக்கியமாகக் கொண்டாடுவது சரஸ்வதி பூஜையும் மறுநாள் ஆயுத பூஜையும் தான். அதை 'சக்தி பூஜை' என்று சொல்வோம். பகல் முழுதும் மௌன விரதமிருந்து புதியதொரு பாடலியற்றுவார். அவைதாம் ''மாதா பராசக்தி''. 'உஜ்ஜயினி' முதலிய பாடல்கள். ஒருமுறை, சக்தி பூஜையன்று மகரிஷி அரவிந்தரும் எங்கள் வீட்டிற்கு விஜயம் செய்திருந்தார். நண்பர்கள் யாவரும் சூழ்ந்திருக்க, என் தந்தை காளிகா தேவிக்குப் பூஜை செய்தார்.

சாக்தமதக் கொள்கையையே அவர் பெரிதும் மேற்கொண்டவர். 'சக்திதாஸன்', 'காளிதாஸன்' என்ற புனை பெயரோடு தான் அவரது வியாசங்கள் பல பத்திரிகைகளில் வெளிவந்திருக்கின்றன. நான் ஒரு நாள் கேட்டேன், 'அப்பா, நம் நாட்டில் வைஷ்ணவம், சைவம் என்று இரண்டுமதங்கள் தாமே இருக்கின்றன. நீயோ சக்தி மதம் என்று சொல்கிருய். மூன்ருயிற்று. ஆனுல் என் மனதிலோ விநாயகர் மீதுதான் அதிக பக்தி தோன்றுகிறது. நான் எந்த மதம்?' என்று. என் தந்தை உற்சாக மேலிட்டவராக ''ஸ்ரீ சங்கராசாரியார் ஆறு மதங்கள் ஸ்தாபித்ததைப்பற்றி உபதேசம் செய்தார். அத்துடன் ''வங்காளத்தில் காணுபத்திய மதத்தை இப்பொழுதும் கொண்டாடுகிருர்கள். அதனுல் நம் வீட்டில், பாப்பா காணுபத்திய மதம்' என்ருர். எனக்குப் பள்ளிப் பிள்ளையார் சிந்தனையைப் படிப்பித்தார். அதைத் தினந்தோறும் சாப்பிடுமுன் ஒருமுறை சொல்லி நான் வணங்குவது வழக்கம்.

பிறகு, புதுவை மணக்குள விநாயகர் மீது 'விநாயகர் நான்மணி மாலை' எழுதினுர். சாதாரணமாக, புதுவையில் வேறு கோயில்களுக்கு என் தந்தையார் அடிக்கடி போவதை நான் கண்டதில்லை. ஆனுல், புதுவை வெள்ளைக்காரத் தெருவில் உள்ள சிங்கப் பிள்ளையார் கோவிலுக்கு மட்டும் நாங்கள் போவோம். கணபதி மீது சிறு குழந்தைக்குள்ள பக்தியை வளர்ப்பதற்காக அவ்வாறு செய்தாரென நான் எண்ணுகிறேன்.

தற்காலம் புதுவை அரவிந்தாச்ரமத்து 'அன்னை' யென்று அழைக்கப்படுபவரான 'மதாம் ரிஷர்' அம்மையார் அந்த நாளில் தம் கணவருடன் புதுவைக்கு வந்த பொழுது, அவரைக் காண்பதற்காக நாங்கள் போயிருந்தோம். மேல் நாட்டாரது வழக்கப்படி கை குலுக்க வந்த 'மதாம் ரிஷர்' அவர்களை, தந்தையார் கைகூப்பி வணங்கினுர். பிறகு அவரிடம் நம் ஹிந்து சமூகத்தின் பழக்க வழக்கங்களையும் அவற்றின் மேன்மைகளையும் பற்றி வெகு நேரம் சம்பாஷணை நடந்தது. 'மதாம் ரிஷர்' எனக்கு உண்பதற்கு நிலக்கடலையும் வாழைப்பழமும் தந்தார். அத்துடன் பச்சைப்பாசி மணியால் செய்த மாலையொன்றையும் எனக்குப் பரிசாக அளித்தார்.

ஒரு சமயம், என் தந்தை சாதாரணமாகக் குழந்தைகளுக்குக் கற்றுக்கொடுக்கும் முறைப்படி எனக்கு முதல்பாடப் புத்தகத்தைப் படிப்பிக்க ஆரம்பித்தார். சிறிய குழந்தைகளுக்குக்

கணக்கும், பாடமும் கற்பிப்பது எத்தகைய சிரமமான காரியம் என்பதை அப்பொழுது தான் உணர்ந்தார். ''குறைந்தது பத்து வருடங்கள் படித்தவர்களுக்குத்தான் என்னுல் பாடம் சொல்ல முடியும். ஆனுல் நம்முடன் கூட இருந்து பழகுவதிலேயே தனியே படிப்பு வரும். கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவி பாடும், 'என்ற வசனம் போல. கொஞ்சம் பெரியவர்கள் ஆன பிறகு நான் படிப்பித்தால் போதும் ''என்று நிறுத்தி விட்டார். எனவே, என் தாயார்தான் எனக்கு பால பாட புத்தகத்தை எழுத்துக் கூட்டிப் படிக்கக் கற்றுக் கொடுத்தார். அடுத்ததாக நான் வாசித்த புத்தகம் பண்டித நடேச சாஸ்திரியார் எழுதிய ''தலையணை மந்திர உபதேசம்', திடீரென்று நான் பெரியதொரு கதைப்புத்தகத்தை வாசிக்கத் தொடங்கிய காரணம், என் தமக்கை நாங்கள் விளையாடும்போது அவள் சொல்படி நடக்க விட்டால் ஒரு கதைப் புத்தகத்தை எடுத்துக் கொண்டு வாசிக்கப்போய் விடுவாள். வாசிக்கும் போதும் எழுதும் போதும் எக்காரணத்தைக் கொண்டும் அவர்களிடம் பேசி இம்சை செய்யக் கூடாதென்பது எங்கள் வீட்டில் சட்டம். அதனுல் நான் தனிமையாகப் பொழுது போகாமல் உட்கார்ந்திருக்க நேரும். கையில் அகப்பட்ட புத்தகங்களை எழுத்துக் கூட்டி வாசித்து வாசித்து நாளடைவில் தானே நன்ருக வாசிக்கப் பழகினேன். பள்ளிக்கூடங்களில் ஆங்கிலம் கற்பித்தால் என்னைப் பள்ளிக்கு அனுப்ப என் தந்தையார் மறுத்து விட்டார். ''அடிமையுணர்ச்சியை உண்டாக்கும் பள்ளிகூடச் சரித்திரப் பாடங்கள் படிப்பதாலுல்தான் இளைஞர்களுக்கு தேசபக்தியேற்படுவதேயில்லை யென்பார்.

எனக்கும் என் தமக்கைக்கும் சண்டை வராமலிருக்க என் தந்தை ஒரு வழியேற்படுத்தினர். பெரியவர்கள் சொல்வதை சிறியவர்கள் ஒரு வழியேற்படுத்தினர். பெரியவர்கள் சொல்வதை சிறியவர்கள் தட்டாமல் கேட்க வேண்டும். ஆனுல், சிறியவர்கள் கேட்கும் விளையாட்டுப் பொருள்களையோ தின்பண்டங்களையோ பெரியவர்கள் கொடுத்து விட வேண்டுமென்பது.

எனக்குக் கிட்டதட்ட ஆறுவயதாக இருக்கும் போது நானும் என் தாயாரும் என் தாயின் பிறந்தகமான கடையத்துக்குப் போயிருந்தோம். அங்கு என் தாயாரின் சிறிய தந்தையார் (போலீஸ் வேலையாயிருந்து என் தந்தையின் தேசபக்தியின் நிமித்தம் வேலையை ராஜிநாமச் செய்தவர்) இருந்தார். எனக்கு சாப்பிடும்போது தூங்குமுன்பும் எப்பொழுதும் அப்பா கதை சொல்வது வழக்கம். அந்த முறைப்படி கடையத்தில் என் பாட்டனுர் கதைகள் சொல்வார். குரங்குக் கதை, யானைக்கதையெனப் பல கதைகள். ஆனுல் அவை யெனக்குப் போதிய திருப்தியளிக்காது. வீரசிவாஜி, ராணி லட்சுமிபாய் முதலிய கதைகளை என் தந்தை எனக்குக் கொஞ்ச நாட்களுக்கு முன்புதான் சொல்லியிருந்தார். எனவே, சரித்திர சம்பந்தமான கதைகள் சொல்லும்படி கேட்பேன். அது அவரால் கூடவில்லை. ஆகையினுல் அவர் புதியதொரு விளையாட்டு ஏற்படுத்திக் கொடுத்தார். அதில் நான்தான் ராணி (ஜான்ஸி ராணியைப் போல) அவர் தாம் என்னுடைய சைனியம். கிராமத்திலுள்ள குழந்தைகள் எங்களுடன் விளையாட வருவார்கள்—அவர்கள் எதிரிகள்; போர் தொடங்கும். ஒவ்வொரு குழந்தையாகத் தூக்கித் திண்ணையில் ஏற்றிச் சிறை செய்த பிறகு, வெற்றிகரமாக விளையாட்டு முடிவடையும்.

என் சிறிய பாட்டனுர் மிகுந்த பலசாலி. 'வள்ளி வாண தீர்த்தம் ஆடியது' என்ற கதையில் என் தந்தை அவரைப் பற்றி விரிவாக எழுதியிருக்கிருர். உணவில் மிக்க யிருப்பமுள்ளவர். என் தந்தை சொற்ப ஆகாரமே உண்பதைக் கண்டு பழகியிருந்த எனக்கு அவரது பெரிய சாப்பாடு ஆச்சரியத்தை உண்டாக்கும். சில சமயங்களில், அவர், 'ராணி அம்மா, சைன்யத்திற்குப் பசி வந்து விட்டது. உடனே தக்க ஆகாரம் தேடிக் கொடுக்காவிடில் எதிரிகள் பக்கம் சேர்ந்து விடும்' என்பார். என் மனம் பதறும், உடனே ஓடிப்போய் என் பாட்டியிடம் கேட்டுத் திண்பண்டங்கள் வாங்கி வந்து கொடுப்பேன். அவர் தம் பசி தீர்ந்ததாக ஒப்புக் கொண்ட பிறகு தான் என் மனம் ஆறுதலடையும்.

[ வளரும் ]

# கிழட்டு சமையற்காரன்

— ரஷ்ய மூலத்திலிருந்து தமிழாக்கம் :
காசிம் சுல்தான்

அது 1786-ம் ஆண்டு கார் கால மாலை நேரம் வியன்னு நகர்புறத்தை ஒட்டிய ஒரு சிறிய மரவீடு. அது வீடு கூட அல்ல; தோட்டத்தின் உட்புறத்தில் உள்ள ஒரு பாழடைந்த குடிசை. அந்த மரக்குடிசையில் விழியிழந்த கிழவன் ஒருவன் அவன் துண் சீமாட்டியின் முன்னுள் சமையற்காரன் சாகக் கிடக்கிருன். தோட்டம் முழுவதும் காற்றினுல் உதிர்ந்த காய்ந்த கொப்புகள் சிதறிக் கிடக்கின்றன. காலடி படும்போது அவை சட சடவென முறியும். அதைக் கேட்டு தன் எஜமானனைப் போலவே வயோதிகத்தால் சாகக் கிடக்கும் அவன் நாயும் தன் கொட்டடியில் கிடந்த படியே குறைக்கும்; இல்லை, குறைக்க முடியாமல் முனகும்.

சில ஆண்டுகளுக்கு முன், அடுப்பின் அனல் பட்டு அவன், அந்த வயோதிக சமையற்காரன், தன் கண் பார்வையை இழந்தான். அதற்குப் பின் சீமாட்டியின் காரியக்காரன், அவனை இந்தக் குடிசையில் தங்க விட்டு அவ்வப்போது கொஞ்சம் பணமும் கொடுத்து வந்தான். கிழவனுடன் சுமார் பதினெட்டு வயது மகள் மரியாவும் வசித்து வந்தாள். அந்தக் குடிசையில் இருந்ததெல்லாம் ஒரு கட்டில், சில காலொடிந்த பெஞ்சுகள், ஒரு மேஜை, சில மூளியான சட்டி பானைகளுந்தான். அதோடு ஒரு பியானேவும் இருந்தது. அது தான் மரியாவின் ஒரே பொக்கிஷம்.

அந்தப் பியானே மிகப் பழமையானது. தன் அருகில் ஏற்படும் சிறு ஓசையைக் கூட அது நெடுநேரம் மென்மையாக எதிரொலித்துக் கொண்டே இருக்கும். இதனுல் தான் அவன் அதைத் தன் "வீட்டின் காவற்காரன்" என்று வேடிக்கையாக அழைத்தான். வீட்டிற்குள் நுழையும் ஒவ்வொருவரையும் அந்தப் பியானே தன் நடுங்கும் கிழட்டு உறுமலால் வரவேற்கத் தவறுவதேயில்லை. அதற்குத் தெரியாமல் யாரும் வீட்டிற்குள் நுழைய முடியாது.

மரியா, சாகப் போகும் அந்தக் கிழவனின் முகத்தைக் கழுவி, அவனுக்கு ஒரு சுத்தமானசட்டையை அணிவித்தாள். அப்போது கிழவன் சொன்னுன், "நான் எப்போதும் பாதிரிகளையும், குருக்களையும் வெறுத்தே வந்திருக்கிறேன். ஆகவே நான் பாவமன்னிப்புப்பெற பாதிரியாரைக் கூப்பிடமுடியாது எனினும் நான் மரிப்பதற்கு முன்னுல் என் மனசாட்சியை தூய்மைப் படுத்திக்கொள்ளவேண்டும்."

"நான் என்ன செய்யவேண்டும்?" என்று மரியா பயந்த குரலில் கேட்டாள். கிழவன் சொன்னுன்: "தெருவிற்குப் போய் நீ பார்க்கும் முதல் ஆளை நம் வீட்டிற்கு அழைத்து வா. சாகப் போகும் ஒருவனின் பாவ ஒப்புதலைக் கேட்பதற்காக என்று சொல்லு; யாரும் மறுக்க மாட்டார்கள்."

"நம் தெருவில் ஆள் நடமாட்டமே இருப்பதில்லையே" என்று முணுமுணுத்துக் கொண்டே, மரியா சால்வையை மேலே போட்டுக்கொண்டு வெளியே போனுள். தோட்டத்தின் வழியாக ஓடி, துருப்பிடித்த கதவை கஷ்டப்பட்டுத் திறந்துகொண்டு தெருவில் வந்து நின்ருள். தெரு வெறிச்சோடிக் கிடந்தது. காற்று இலைசருகுகளைத் தெருவில் வாரியடித்தது. இருண்ட வானிலிருந்து குளிர்ந்த மழைத் துளிகள் விழுந்து கொண்டிருந்தன.

மரியா வெகு நேரம் கவனத்தோடு காத்திருந்தாள். கடைசியாக யாரோ ஒருவர், ஒரு பாட்டை வாய்க்குள் முணுமுணுத்தபடி, வேலியின் ஓரமாக வருவது தெரிந்தது. மரியா அவரை நோக்கி சில அடிகள் எடுத்துவைத்தாள். மையிருளில் அவர் மீது மோதிக்கொண்டு 'ஓ' என்று கூவினுள். அந்த மனிதன் நின்று விட்டார்; யார் அங்கே என்று கேட்டார். மரியா அவர் கையைப் பிடித்துக்கொண்டு கெஞ்சும் குரலில் தன் தந்தையின் வேண்டுகோளை அவரிடம் சொன்னுள். நல்லது, நான் பாதிரியார் அல்ல; அதனுல் பரவாயில்லை; வா,

போவோம்,' என்று அந்த மனிதர் நிதான மாகச் சொன்னர்.

அவர்கள் வீட்டிற்குள் நுழைந்தனர். வெளிச்சத்தில் பார்க்கும்போது அவர் ஒல்லியாகவும் குள்ளமாகவும் காணப் பட்டார். தன் நனைந்த மழைக்கோட்டை கழற்றிப் பலகையின்மீது போட்டார்.

அவர் உடை ஆடம்பரமாக இல்லா விட்டாலும் எடுப்பாக இருந்தது. அவர் சட்டையிலுள்ள கண்ணுடிப் பொத்தான் கள் மெழுகு வர்த்தியின் ஒளியில் மின் னின. அப்புதியவரின் தோற்றத்திலே வாலிப முருக்கு கலையாமல் இருந்தது. முகத்தின்முன் விழுந்த முடியை, இளைஞ னைப்போல் தலையின் ஒரு சிலுப்பால் ஒழுங்குபடுத்திக்கொண்டு, கட்டிலின் பக்கத்தில் ஒரு முக்காலியை இழுத்துப் போட்டு அமர்ந்து, அந்த சாகப்போகும் மனிதனின் முகத்தை ஆவலோடு, உற்சாகப்படுத்தும் வகையில் குனிந்து பார்த்துச் சொன்னர் :

'பேசுங்கள்! ஒரு வேளை, கடவுளால் எனக்குக் கொடுக்கப்பட்ட ஆற்றலினல் முடியாவிட்டாலும், நான் சேவை செய்யும் கலையின் ஆற்றலால் உங்களுடைய கடைசி நிமிடங்களை இலகுவாக்குகிறேன்; உங்கள் ஆன்மாவை அழுத்திக்கொண்டிருக்கும் பாரத்தை நீக்குகிறேன்.''

அப்புதியவரின் கையைப் பிடித்து அவரைத் தன் பக்கம் இழுத்து, மெதுவான குரலில் அந்தக் கிழவன் சொன்னன், 'என் வாழ்நாள் முழுதும், என் கண் பார்வை இருந்தவரை, நான் உழைத்துக்கொண்டே இருந்தேன், சதா உழைக்கும் ஒருவனுக்குப் பாவம் செய்ய நேரம் ஏது ? என் மனைவி-மார்த்தாள்-க்ஷயரோகத்தால் பீடிக்கச் சொன்ன பலதரப்பட்ட மருந்துகள் மிக விலையுயர்ந்தனவாக இருந்தன. அவளுக் குச் சூடான சிவப்பு திராக்ஷை ரசமும் கொடுக்கச் சொன்னர்; நான், துண் சீமாட்டியின் சிறிய தங்கக் கோப்பை ஒன்றைத் திருடி, அதைத் துண்டுகளாக்கி, விற்றுவிட்டேன். அதை இப்பொழுது நினைக்கும்போதும், என் மகளிடம் அதை மறைக்கும்போதும், துக்கம் தொண் டையையடைக்கிறது. பிறர் சொத்தில் ஒரு துரும்பைக்கூட தொடக்கூடாது என்று என் மகளுக்குப் போதித்தேனே!'

'அந்தச் சீமாட்டியின் மற்ற வேலைக் காரர்கள் யாரும் இதற்காக தண்டிக்கப் பட்டார்களோ?' என்று அப்புதியவர் கேட் டார்.

''நான் சத்தியமாகச் சொல்லுகிறேன், யாரும் தண்டிக்கப்படவில்லை, ஐயா,'' என்று சொல்லி அழ ஆரம்பித்து விட்டார் கிழவர். என் மார்த்தாளின் நோயைப் போக்க இந்தத்தங்கம் உதவாது என்று தெரிந்திருந்தால் நான் திருடியிருக்கவே மாட்டேனே, என்று புலம்பினர்.

'உங்களுடைய பெயர் என்ன ?' என்று விசாரித்தார் அப்புதியவர்.

'இயகான் மேயர், ஐயா'.

அந்தக் கிழவரின் பார்வையிழந்த கண் கள் மீது தன் உள்ளங்கையை வைத்து, அப்புதியவர், 'நல்லது இயகான் மேயரே, நீர் மனிதர்கள் முன்னுல் குற்ற மற்றவர். நீர் செய்தது பாவம் அல்ல; அது திருட்டும் அல்ல, மாருக அது நீர் சாதித்த ஒரு தர்ம கைங்கரியம் என்று சொல்லலாம்', என்ருர்.

'ஆமென்' என்ருர் கிழவர்

'ஆமென்' என்று அப்புதியவரும் சொன்னர். 'இப்பொழுது உங்கள் கடைசி விருப்பத்தை என்னிடம் சொல்லுங்கள்' என்ருர்.

'மரியாவை யாராவது காப்பாற்ற வேண் டும்'

'நல்லது; நான் அதைச் செய்கிறேன். வேறு என்ன உங்களுடைய விருப்பம் ?''

அப்போது அந்தச் சாகப்போகும் மனிதன் எதிர்பாரா வகையில் முறுவலித் தான். பின் உரக்கச் சொன்னன், 'என் மார்த்தாளை, என் வாலிபப் பருவத்திலே அவளை சந்தித்தேனே, அதே உருவத்தில், அவளைப் பார்க்கவேண்டும்போல் இருக் கிறது. சூரிய ஒளியையும், வசந்த காலத் திலே இந்தப் பழைய தோட்டம் பூத்துக் குலுங்குவதையும் காணவேண்டும் போல் இருக்கிறது. ஆனல் அது முடியாத காரியம், ஐயா என் முட்டாள் தனமான பேச்சைக் கேட்டுக் கோபப் படாதீர்கள். நோயால் என் மூளையே குழம்பிப் போய் விட்டது போலும்.'

அப்புதியவர் 'நல்லது என்று சொல்லிக் கொண்டு எழுந்தார். 'நல்லது என்று

சொல்லிக் கொண்டே பியானோவின் அருகே போய் ஒரு முக்காலியை இழுத்துப் போட்டு அமர்ந்தார். 'நல்லது' என்று மூன்ருவது முறையும் பலத்த குரலில் சொன்னர். அப்படிச் சொன்ன உடனே அந்த வீடு முழுவதும் திடீரென்று ஒரு கிங்கிணி ஓசை உருண்டோடியது, ஆயிரக் கணக்கான பளிங்குத் துண்டுகள் தரையில் சிதறியது போல.

'கவனியும்! கவனித்துப் பாரும்' என்று அப்புதியவர் சொன்னர்.

அவர் பியானோவை வாசிக்க ஆரம்பித்தார். அவருடைய விரல்கள் பியானோவின் ஸ்வரக் கட்டைகளை முதல் முதலாகத் தொட்டபோது ஏற்பட்ட ரீங்காரத்தையும் அப்போது இருந்த அவர் முக பாவத்தையும் மரியா பின்பு நினைவு படுத்திக் கொண்டாள் அவர் முகம் அசாதாரனமாக வெளுத்துப் போய்விட்டது. அவருடைய இருண்ட கண்களிலே மெழுகுவர்த்தியின் சுடர் தாண்டவமாடியது.

பல ஆண்டுகளில் முதன்முறையாக அந்தப் பியானோ தன் முழுக் குரலுடன் ஒலித்தது. அதன் ரீங்காரம், வீட்டில் மட்டுமல்ல, தோட்டம் முழுவதும் நிரம்பியது. கிழட்டு நாய் தன் கொட்டடியிலிருந்து ஊர்ந்து வந்து, தன் தலையை ஒரு பக்கமாக சாய்த்து உட்கார்ந்து கொண்டு, தன் காதுகளை விடைத்து, வாலை மெல்ல ஆட்டியது. வெளியே ஈரப் பனி பெய்ய ஆரம்பித்து விட்டது. ஆனல் அந்த நாய் தன் காதுகளை மட்டும் தான் சிலுப்பியது.

கிழவனர் படுக்கையில் பாதி எழுந்தவாறு கூவினர். 'ஐயா, எனக்குத் தெரிகிறது! அந்தநாள் நான் மார்த்தாவை சந்தித்த அந்தநாள் அவள் வெட்கத்தால் கை நடுங்கிப் பால்கூஜாவைக் கீழே போட்டு உடைத்த அந்தநாள் எனக்குத் தெரிகிறது. அதுமாரிக்காலம்! மலையடிவாரம்! வானம் நீலக்கண்ணுடி போல் நிர்மலமாய் இருந்தது. மார்த்தாள் சிரித்துக்கொண்டிருந்தாள்.' பியானோ தந்திகளின் சிரிப்பொழியைக் கேட்டுக் கொண்டே, 'சிரித்துக் கொண்டிருந்தாள்' என்று மறுபடியும் சொன்னர்.

இருண்ட ஜன்னல் வழியே பார்த்தவாறு அப்புதியவர் வாசித்துக் கொண்டிருந்தார்.

## அருள் வாக்கு

பறவைகள் பறந்ததன் அடையாளம்
வானத்தில் இல்லை.

மீன் நீந்தியதன் அடையாளம்
நீரில் இல்லை.

அங்ஙனம் அகங்காரம் அற்றவனுக்கு
ஜீவியத்தில் அடையாளமில்லை.

'இப்பொழுது ஏதாவது தெரிகிறதா?' என்று விசாரித்தார்.

கிழவர் கவனமாகக் கேட்டவாறு மௌனமாக இருந்தார். வாசிப்பதை நிறுத்தாமலே அப்புதியவர் கேட்டார், 'கரிய இரவு கருநீலமாக மாறி பின் வெண்நீலமாகி விட்டதே, உங்களுக்கு உண்மையாகவே தெரியவில்லையா? அதோ வெதுவெதுப்பான வெளிச்சம் எங்கோ மேலிருந்து விழுகிறதே? மரங்களின் பழைய கிளைகளில் வெண் மலர்கள் மலர்ந்து விரிகின்றனவே? தெரியவில்லையா? இங்கே, அறையிலிருந்து பார்ப்பதற்கு அவை பெரிய பூவரசம் பூக்கள் போல் தெரிகின்றன; ஆனல் அவை ஆப்பிள் மரப் பூக்கள்தான் என்று நினைக்கிறன். அதோ, பாரும்! சூரியனின் முதற் கதிர்கள் கற்சுவற்றில் விழுகின்றன. சுவர் சூடாகி அதிலிருந்து ஆவி கிளம்புகிறது; பனியில் நனைந்த பாசி காய்வதால் உண்டாகும் ஆவியாக இருக்கும். வானம் உயரே, உயரே போய்க்கொண்டிருக்கிறது. அது மேலும், மேலும் நீல நிறமாக மாறி சோபிக்கிறது. பறவைக்கூட்டம் நம் பழைய வீயன்ன நகரின்மேல் வடக்கு நோக்கி பறந்து செல்கிறது.

'எனக்கு அவை யெல்லாம் தெரிகின்றன' என்று கிழவர் கூவினர்.

பாதமிதி மெல்ல கிரீச்சிட்டது, பியானோவின் குரல் களியாட்டம் போட்டது. இசை பியானோவிலிருந்து வருவ

தாகத் தோன்றவில்லை ; ஆயிரம் எக்காலக் குரல்களிலிருந்து வருவது போல் இருந்தது.

'இல்லை, ஐயா ; அந்தப் பூக்கள் பூவரசம் பூக்கள் போல் இல்லை, அவை ஆப்பிள் மரப் பூக்கள் தான் ; ஒரே இரவில் மலர்ந்து விட்டன' என்று மரியா அப்புதியவரிடம் சொன்னாள்.

'ஆம், அவை ஆப்பிள் மரப் பூக்கள் தான். ஆனால் அவைகளின் இதழ்கள் பெரிதாயிருக்கின்றன,'' என்று அப்புதியவர் பதிலளித்தார்.

'ஜன்னலைத் திற, மரியா' என்று கிழவர் வேண்டினார்.

மரியா ஜன்னலைத் திறந்தாள். குளிர்ந்த காற்று அறைக்குள் முண்டியடித்துக் கொண்டு வந்தது. புதியவர் மிக அமைதியாகவும் நிதானமாகவும் வாசித்துக் கொண்டிருந்தார். கிழவர் கட்டிலில் சாய்ந்தார்; அவருக்கு மூச்சு வாங்கியது; கைகள் போர்வையைத் துழாவின. மரியா அவரருகில் விரைந்தாள். புதியவர் வாசிப்பதை நிறுத்தி விட்டு தன் சங்கீதத்தில் கட்டுண்டவர் போல், பியானோவின் அருகில் சலனமற்று அமர்ந்திருந்தார்.

மரியா அலறினாள். புதியவர் எழுந்து கட்டில் அருகில் சென்றார். மூச்சுத் திணறிக் கொண்டே கிழவர் சொன்னார் ; 'நான் எல்லாவற்றையும் தெளிவாகப் பார்த்தேன், அனேக ஆண்டுகளுக்கு முன்பு பார்த்ததைப் போல. ஆனால் உங்கள் பெயரைத் தெரிந்து கொள்ளாமல் நான் சாக விரும்பவில்லை. உங்கள் பெயர்...உங்கள் பெயர்...'

'என் பெயர் வோல்ப்கங் அமிதேய மோஸார்த்' என்று அப்புதியவர் பதிலளித்தார்.

மரியா பின்னுக்குப் போய், அந்த சங்கீத மா மேதையின் முன், முழந்தாளிட்டு சிரம் தாழ்த்தி வணங்கினாள்.

அவள் எழுந்திருந்த போது கிழவர் ஏற்கனவே இறந்து விட்டது தெரிந்தது.

ஜன்னலுக்கு வெளியே, பொழுது புலர்ந்தது. அதன் வெளிச்சத்திலே தோட்டம் முழுவதும் வெண் பனிப் பூக்கள் சிதறிக் கிடந்தன.

## சீர்திருத்தம்

சீர்திருத் தம் என்று செப்புவார்—இந்தச்
செகத்தை உயர்த்திட எண்ணுவார்
சீர்திருத்தம் செய்வதெப்படி—தமைத்
தாம்திருத் திக்கொள்ளு முன்னரே?

கார்திருந்திக் களி கூடியே பொன்
காட்டு மழைக்குறி காட்டுமேல்
ஏர்திருத்திப் பயிர் செய்யலாம்—அன்றி
ஏழையர் என்செய்ய வல்லரே!

போர் திருத்திப் பலர் போயினர்—புவிப்
போக்கைத் திருத்திய தில்லையே
பேர்திருத்திப் புகழ் கூடுவார்—அன்றிப்
பிழை திருத்தம் செய்ய வல்லரோ!

பார்திருத்திப் பயிர் செய்யுமுன்—விதைப்
பக்குவம் பார்க்கவும் வேண்டுமே
ஓர் திருத்தம் செய்ய எண்ணுவோன்—தனது
உள்ளந் திருந்திட வேண்டுமால்!

# MAN AND BEAST ( A REVERIE )

— K. NATARAJAN

One day, shortly after the recapture of Brunei (North Borneo) from the Japanese by the Australians, I took an early walk of an evening to the hill top which was my favourite retreat whenever I felt de pressed or averse to human company.

I was in a dismal mood, for, earlier that day, I had an argument with an Astralian Lieutenant, an educated young man, who asserted that animals have no souls as they were devoid of thought or reasoning. He also quoted the authority of the Bible that all creatures on earth were created by God for the benefit of man. With only a superficial acquaintance of the Bible I could not refute his statement but I felt it in my bones that he was wrong.

If soul is only the principle of thought or action then the animals too have it, though perhaps of a lesser degree. If it is an advanced state of intellectual and spiritual power, even among men, only a few have it. If it is the seat of emotion and feelings I am sure the animals have it in ample measure bearing in mind their many qualities of head and heart which throw man into the shade. And for all his intellect and wisdom man has yet to succeed in overcoming his baser qualities of greed, envy, hatred, tyranny and pride. On the other hand, instances of the love and loyalty and intelligence of animals and their gratefulness and sublime sacrifice for the sake of those they love and regard are legendary.

I took up my favourite position on a rock and gazed at the vista of the small hills ranged one behind the other. The verdant growth on their top was soothing to my racked nerves. In between the hills I caught a glimpse of the Brunei Bay glittering like silver in the light of the evening Sun. And soon the setting Sun added to their glory. It embellished the landscape with its myriad hues. Lost in wonderment, I was riveted to my seat till it was dark. But darkness had no terrors for me as the country was singularly free from poisonous reptiles and wild animals. It was also a moonlit night.

The thought of animals brought back to my mind the discussion of the morning and I was trying to analyse in my mind how far we were better than the animals. I was interrupted in my brooding by the approach of a huge dark animal. Strangely enough, no sense of fear or danger obtruded my mind. Soon I discerned that it was an elephant.

Ever since I was a boy I had a soft heart for the elephants Many were the fun and frolic I had with Sambu, a small elephant belonging to my friend Koya, a timber contractor. In conformity with their size and power, elephants possess also great and noble hearts in that they reciprocate any kindness shown to them. So I watched the elephant's approach with friendly interest. Majestically it raised its trunk in salutation and kneeled before me on its front legs. For a moment I did not take its meaning but soon it flashed upon me that it was an invitation to mount. Without hesitation I got up and put my legs astride its neck like a real 'Mahoot'.

It turned on its tracks and plunged into the jungle. Though for a time I was able to retain a sense of direction, I was soon completely lost among the tall trees, the thick foliage above and the many sharp turns that we took. Never for a moment, however, did I have any qualms of fear or apprehension. The bearing and dignity of my host inspired complete confidence in the purity of its intent. We went a long way and, except for the snaps of a few twigs under the tread, the eerie silence of the woods was unbroken.

We reached a big clearing in the midst of the forest. A large herd of elephants was browsing there. A few calves were gamboling in the centre teasing one another. The mothers were strolling gracefully watching the antics of their offsprings with indulgent eyes. A young one was suckling

its mother's. Others were nibbling at the tender twigs and leaves. An old fellow was rolling on the ground shaking the pain off its tired limbs. The tuskers were showing off their strength and manhood by friendly rivalry to their bemused but shy sweet-hearts. An amorous pair were caressing each other twining their trunks in fond embrace. The veterans were mounting guard at the out-skirts. It was a fascinating spectacle.

But the placidity of the scene was suddenly marred by the blare of alarm from a sentry. The tuskers became alert The calves huddled together in the centre, their mothers surroundiug them. At another roar half a dozen tuskers marched out in perfect order. The sentries however, held to their posts. My host was unperturbed. He turned towards the direction of the marching tuskers and followed them in unhurried strides. At a distance there was a scuffle. The enemy was an old and cunning rogue who had sneaked in to observe the lie of the land. He had succeeded in tripping down the sentry but when he sighted the tuskers, beat a precipitate retreat. The tuskers gave chase but my host with a loud bellow forbade them With great reluctance they returned grumbling "Oh! you spoil-sport. We could have caught him up in a jiffy and ended the pest forever."

"Certainly not," observed my host, "I know him. He is a decoy. He has seen more summers then any of you and knows the forest inside out. He would have lured you far and away while his mates attacked our weakened herd." "Double the guard," he ordered tersely, and send out Long legs' to explore the situation. Warn the mothers and calves to be ready to quit at amoment's notice.' After a stillness which appeared to me ages, the distinct sound of the snapping of two big branches was heard. That was their 'all clear' signal. The guards relaxed and the mothers began fondling the calves. The tuskers strutted as before

Perhaps my host thought that I had seen enough of their way of life. With incredible swift strides he was taking me back. But in this bad, mad, sad world one can't have peace As we were proceeding, two distant shots from a gun disturbed our composure. My host checked his stride abruptly, twitched his ears and listened in the direction of the shots. After a few moments of deep reflection he raised his head and turned to me as though to say, "This is what you. Homo Sapiens, do to us for no fault of ours and you call it Sport!"

It was clear that my host was perturbed. However, he carried me to the roadside and left me there. Before he left me, he lifted his trunk in salutation and I said "If only the human race had half your wisdom and understanding the world would be a better place to live in"

# PROSE PETALS

By AMARYLLIS

(Translation of Triloka Sitaram's ILAKKIAP PADAGU in Tamil)

## 2. The Smile Beatific!

This term holds a peculiar fascination for me The Beatific Smile silently conveys the ineffable and unspoken thoughts and feelings within; it has a valorous beauty all its own, concentring the passion within on the converged lips.

The smile beatific is the prerogative of two Beings. One is Lord Shiva; the other, Lord Buddha. The Former is the God that made us; the other, born as a son of man, attained Godhead later.

Creation is just a sport. It has no significance whatever. But then what a fuss the mortals make! The countless lives that appear, grow and die away (Sooner or later), How seriously they take their bubble-like existence, making each exciting moment as if it were eternity itself, needlessly complicating

**the game of life into a serious affair**–till lo! the little touch, the play is over, the bubble bursts and they fade away! The wonder of this, is perhaps what amuses Lord Shiva! He is God.

If it is realized that life is a game, then there can be no worries in it. Nor will the reactions of Nemesis follow. The Lord Buddha had the courage of the wisdom to accept this our reaction-ridden life as just a game-the daring of such an acceptance flowered in the face of the Buddha as the smile Beatific. It is man's reply to his Creator's sport. Hence the Buddha ended up as a God.

Let us take an example:

Suppose that the finger of a chess-player, moving the pieces here and there, gleefully cutting and checking, looks down upon the pieces suffering under its power and smiles victoriously as if to ask 'What wilt thou do now?', then that smile is Lord Shiva's serene smile.

Though bound by the rules of the game to move under the finger's direction from place to place, if one lone piece were to stand undaun'ed, surviving all the checks and traps; and if that piece were to ask the moving finger, 'What more canst thou do?', smiling mockingly the while, then that simle will be the Buddha's beatific smile!

We do not know exactly the significance of the Creator's smile; but we do know the meaning of the bubbling smile of the created object. It connotes only the courageous comprehension that it is eminently possible for a human being to enjoy his life by keeping afloat in the flooding sea of consciousness, while always steering clear of the maelstroms that haunt human existence.

In fact, the Grace-Abounding serene smile of Shiva and the All-knowing, Enlightened smile of the Bodhisattva are nothing but lotus-blossoms burgeoning on our own consciousness. For, is not the human mind the stage whereon is played the sempiternal sport, of which Creator, Creature and Creation are the actors? This wonderful faculty where the Cosmic Dance of Life is conceived by the human mind, is Literature. Literature therefore, is nothing but the flowering of the mental worlds' magnificently beatific smile.

**The world can be likened to a vast arena** whereon are cast in confused disorder, the gathered mass of contradictions that do not conform to each other as also the dichotomised principles like good and bad, light and darkness, living and dying, pain and pleasure, love and hate and so on, so that it lo ks more like a huge garbage heap or a wild heath overgrown with rank weed and thorn. But even when we get disgusted and tired as we cross the wilderness between the two termini i of life and death, we are not prepared to give up; nor do we understand easily the reason for this stra attachment. Such an attraction, such an enchantment, is running like an undercurrent or sap through all these contradictions in nature.

The human mind struggling to find its place between the two extremes of fear and fascination at the magnetic power of Nature; (fearing the loss of individuality and fascinated by the very prospect of total union with it) becomes source of amusement to nature. It is her mysterious Beauty when she smiles at man's plight that sustains us again through all our woes

The artist or the poet however, transcending the apparent dichotomy of earthly life, has the magical faculty to capture the elusive quality of oneness that runs through everything like a fine thread When he so succeeds, out of his confident smile, great art is born. I would like to point to literature especially in this context

The poet-saint sang that he was ready to accept even repeated human births if only he were blessed with the sight of the Beatific Smile of Lord Shiva. What a significance is there in the stress laid on the phrase 'even a human birth'. Human life is base; undesirable; but if Lord Shiva's serene smile could surely be seen, even that baseness of human existence becomes worthwhile

There is nothing wrong in our emphasizing that human existence **alone** is needed, for enjoying the pleasures of Literature. For is it at all possible for creatures to have, in other forms of creation, the blissful smile of the poet that is called Literature?.

# குருவிக் கூடு

— திருலோகசீதாராம்



# THE PALLET OF PHEASANTS

— T. N. Ramachandran

தொடர்ச்சி : 2

Continued : 2

## 3. பறையறைதல்

ஊர்மக்கள் யாவரும் உணர்கவே தீம்தீம்
உடன் இந்தச் சேதியை உணர்கவே தீம்தீம்
பழையனூர் மிட்டாப் பாண்டியர் தமக்குப்
பட்டதோர் கடனுக்குப் பாத்தியம் ஆக
பண்ணையார் வீட்டுத் தோட்டமும் இந்தப்
பாழ்மனை ஒன்றும் பலர்முன் நிலையிலே
விற்கவே ராஜாங்கக் கட்டளை தீம்தீம்
விலைகொள விழைகுவோர் விரைகவே தீம்தீம்

*ஊர் மக்கள்*

- அண்ணே என்ன அநியாயம் இது?
- குடியாய் இருந்த வீட்டில் கொள்ளி
  வைக்கும் உலக வழக்கம் தம்பி
- காலையில் வில்லைச் சேவக ருடனே
  காரில் வந்து இறங்கியவர் யார்?
- பழையனூர்ப் பாவி பாண்டியன் பெற்ற
  பிள்ளையாம் ... ... ...
- ... அந்த பிள்ளைக் கன்றோ
  பண்ணையார் மகளைப் பரிசம் என்று
- பேச்சு நடந்தது பண்ணையார் வாழ்ந்த
  காலத்தில் பின்அக் ... ...
- ... ... காலமும் போகக்
  கடனும் பெருகக் கயவர்கள் சூழ்ந்து
  ஏய்த்துப் பிழைத்ததும்... ...
- ... ... எல்லாம் தெரியும்
- இருந்ததெல்லாம் இழந்து பண்ணையார்
  எண்ணம் உடைந்தார் ... ...
- ... ... எப்படி வாழ்ந்த
  குடும்பம் இன்று எப்படிப் போச்சு?
- வாரி வழங்கிய வள்ளலின் கையில்
  வாங்கிப் பிழைத்த வகையெலாம் மறந்தார்

## 3. The Beat Of Drum

- Hearken to this ye villagers. tum. tum
  There is news for all of you. tum, tum
  The manor grove and this ruined house
  Are brought to sale in auction open
  To satisfy the claim of debt
  Due unto the Manor Lord of Palayanoor
  This by legal proclamation, tum. tum
  Hurry up bidders, tum. tum

**Citizens**

- Brother, what injustice is this ?

  It is the world's way to set
  ablaze the house tenanted.
- Who did come in the morn
  With liveried servant in a car ?
- The sinful son of Manor-Lord
  Of Palayanoor... ... ...
- ... Was it not talked about
  In the days of our Manor-Lord

  That he should wed our Lord's daughter
  But then... ... ...
- ... With change of time
  Debts increased and cheats did
  Begin to flourish ... ... ...
- ... ... All this is known
- Our Lord did lose his all
  And his heart was broke ...
- Behold the house that once flourished
  And what it has come to ...
- They that lived on the patron's doles
  Had clean forgot the entire past

| | |
|---|---|
| - வறுமையோர் கொடுமை. அதுவும் வள்ளல் | - Evil is indigence. If a lord generous |
| - வறியனாய்ப் போனால் வன்க ணாளர்கள்<br>கொத்திப் பிடுங்கும் கொடுமை தகாது | - grow penurious, the plunder<br>By evil ones is insufferable. |

## 4. பழையனூர்ப் பாண்டியன் மகனும் அவனது பரிவாரமும

## 4. The son of the Manor - Lord of Palayanoor and his retinue

| | |
|---|---|
| - யாரது உள்ளே ... | - Who is in ... |
| - ... ... யாரது? | - ... ... Who doth enquire |
| - ... ... கதவைத்<br>திறப்பீர் சர்க்கார் சேவகர் நாங்கள் | - ... ... ... Unbar<br>The door, we are servants of law |
| - இந்த வீடுதான் எஜமான், இதன்பின்<br>புறத்தில் ஓர் தோப்பும் புல்வெளிக் கப்பால்<br>போகும் பாட்டையின் பக்கத் திருக்கும்<br>குளமும் கணக்கில் குறித்திருக் கின்றது, | - This is the house, my lord, behind this<br>Is a grove and beside the pasture<br>Runs a path to the tank,<br>All these the decree covers. |
| - கணக்கெலாம் சரிதான். கந்தா நீவா.<br>காவலுக் கிருவர் காத்து நில்லுங்கள்<br>நாம்போய் இங்கு நாலாபக்கமும்<br>சுற்றிப் பார்த்துச் சொத்தின் எல்லையும்<br>ஏல மதிப்பும் என்னதான் என்று<br>கணித்துப் பார்க்கலாம் ... ... | - All this is all right Kanda, come here.<br>Let two men stand as guard<br>We shall go round and survey<br>The extent of the property<br>To assess its worth and biddable value. |
| - ... ... காலின் கீழே<br>பார்த்து வாருங்கள். பாதையில் எங்கும்<br>நெருஞ்சிமுள் கிடக்கும் நேரே சென்று<br>ஒற்றைத் தடத்தின் ஓரமாய் நடப்போம் | - ... ... My lord<br>Should watch his steps; the path<br>Is full of thorns and let us walk<br>Upon the trodden foot path |
| - கந்தா நமது கணக்கின் படிக்குச்<br>சேர வேண்டிய செல்வம் எத்தனை! | - Kanda, what doth our account show<br>How much is due to us ! |
| - பன்னீ ராயிரம். அத்துடன் பத்து<br>வருடமாய்ச் சேர்ந்த வட்டியும் கூட்டி<br>வசூல் செலவுக்கும் வகைசெய் வித்துக்<br>கோர்ட்டார் முத்திரை கொடுத்திருக் கின்ற<br>தொகையின் மொத்தம் ... ... | - Twelve thousand. To this interest due<br>For years ten, is to be added<br>The cost of suit is also there.<br>According to the sealed decree<br>The total... ... |
| - ... ... தொலையட்டும் இரு<br>இந்த வீட்டின் எடுத்துக் கட்டும்<br>தோப்பின் அழகும் தொன்மையாய் ஆண்ட<br>வாழ்வின் கனிவை வகுத்துரைக் கின்றன. | - ... ... Better ignore it<br>The aspect of this house and the beauty<br>Of this grove, both declare<br>The ancient nobility that reigned here. |
| - உள்ளது எஜமான் உள்ளது ... | - It is so my lord, even so ... |
| - ... ... ... என்னது? | - ... ... ... What ? |
| - தாங்கள் உரைத்தது ... ... | - What your lordship spoke |
| - ... ... தனியாய் இங்கோர்<br>தென்னை மரம்பார் ... ... | - ... ... Look<br>Here is a lone cocoa palm |
| - ... ... தென்னை மரந்தான் | ... ... It is a cocoa palm. |

| | |
|---|---|
| - அஷ்ட கோணலாய் அவலட் சணமாய்<br>அழகு மேடையின் அருகில் வளர்ந்து<br>நிற்பதை யாரும் நினைக்கவே இல்லையோ? | - Nigh the pretty pavilion<br>It stands crooked and hideous.<br>Has none of this, ever thought ? |
| - இல்லை... யென்றுதான் எண்ணுகின்<br>றேன்யான் | - No .. do I think, none! |
| - நாளை முதலே நமதாய் இந்தத்<br>தோட்டமும் வீடும் சொந்தமாய் விட்டால்<br>முதலில் இந்த முடக்குத் தென்னையை<br>வெட்டி எறிந்து விடத்தான் வேண்டும். | - If to-morrow we come to own<br>This house and the grove, the twisted cocoa<br>Must first be axed and thrown away |
| - வெட்டி விடுவோம் ஆனல் ... | - We can fell it, but ... |
| - ... ... ... ஆனல் | - ... ... But me no buts |
| - ஒன்றுமில்லை. ஒற்றைத் தென்னையின்<br>மேலே குருவிகள் மேவிடும் கூடு<br>கட்டி இருப்பதால் கலைப்பது எப்படி<br>என்றுதான் எண்ணிப் பார்க்கிறேன். | - O, it is nothing; on this lone tree<br>Is nest of pheasants; must this<br>Be removed ? that worries me! |
| - ... ... ... எஏ<br>பாதகம் இல்லை. பார்ப்பதற்கு அழகாய்<br>பாத்தியும் பன்னிற மலர்ச்செடி கொடியும்<br>பக்குவ மாகப் பண்ணை வளர்த்துப்<br>பார்க்க வேண்டும். பதில்சொல் லாமல்<br>நாளையே தென்னையை நறுக்கி விடுநீ. | - ... ... ... Tush<br>It matters not, a garden great<br>With beds and knots of Iris flowers<br>We must rear in splendour fine.<br>Hence scruple not. This you do.<br>On the morrow, cut the cocoa. |
| - சித்தம் போலச் செய்து விடுகிறேன். | - I do as thy lordship wills. |
| ✶என்றே கந்தன் எதிர்பே சாமல்<br>ஏன்றுக் கொண்டான் இளையோன் அங்கு<br>எழிலார் சோலையின் இடையில் தென்றல்<br>நுகரும் மேடையை நோக்கினன் எதிரே<br>எட்டிய மட்டிலும் எல்லாப் பகுதியும்<br>இருகண் ணாலே ஏந்திப் பருகி<br>இறும்பூ தெய்தி இருந்தான். இன்னும்<br>சிறிது நேரத்தில் செல்வம் அனைத்தும்<br>சிக்கும் கைவசம். சிறப்பாய் அந்தப்<br>பாழ்மனை தன்னைப் பளிக்கரண் மனையாய்ச்<br>செய்ததில் சேர்ந்து வாழலாம் என்று<br>கனவுகள் கண்டு களித்தே இருந்தான்.<br>விடுவிடு சிவ சிவ விடு விடு என்றே<br>விந்தைக் குரல்கள் விம்மிப் புடைத்து<br>வீங்கும் தென்னையை விட்டிரு குருவிகள்<br>வீட்டை நோக்கி விரைந்து செல்வதும்<br>வெளியே வந்து திகைப்பதும் ஓடிப்<br>புதரில் குப்பையைப் புகுந்து குடைவதும்<br>புத்தம் புதிய ஓலைகள் அலகால்<br>சீச்சிக் கிழித்துச் சிறியவாய் பற்றிச்<br>செல்வதும் சிறகை அடிப்பதும் அந்தச்<br>சந்தடி இளைஞன் சஞ்சல மனதைச் | - Thus Kandan stood obedient<br>And durst not demur. The lordling<br>Eyed the pavilion where softly<br>Zephyrus whispered. Widely wandered<br>His eyes in delight great.<br>Presently all the wealth would be his.<br>In place of the mouldering house, a mansion<br>Of marble could be built<br>For him to live; so he dreamed<br>And was pleased with his dreams.<br>How mad, how bad, O Lord, my Cod !<br>Voices wondrous spake and louder grew.<br>The pheasants two from the cocoa palm<br>Hurried their flight into the house.<br>Bush and heath they did ferret<br>And with their bills fresh blown fronds<br>They did cut and cart away.<br>Their constant flight startled<br>The mind of the young man. |

கவ்வி யிழுத்தது, கலவரத்தோடு
கண்டதோர் மாளிகை யுட்புறம் காணக்
கருத்தில் விரும்பினன். கணக்கரும் அவன்பின்
கைகள் கட்டி நடந்தார்—பழைய
மாளிகைக் கூடம், மற்றதை ஆண்ட
மன்னவர் படங்கள் மாட்டி யிருந்தன.
புகையும் ஒட்டடைப் புழுதியும் அந்தத்
திருவினர் உருவைத் திரையிட் டிருக்கவும்
அனைத்தையும் கூர்ந்து ஆய்ந்து முடித்தே
ஆங்கொரு பழைய ஆதனம் தன்னில்
அமர்ந்தான்; அந்தப் போதினில் பழைய
சிட்டுகள் இரண்டும் சிறகடித்து ஏதோ
சேதிகள் பேசிச் சிரித்தவ் வீட்டின்
[illegible]டத்து அங்கு கூடி முயன்று
[illegible] கட்டிக் கொண்டிருப் பதையும்
[illegible]பாய் பார்த்தான்—குருவிகள் பேசின. ★

Dismayed, he desired to watch
The happennings in the mansion.
Him followed the countercastor with arms folded;
It was an ancient hall where hung
The portraits of the kingly lords
Who reigned in days of yore
Soot and cobweb their profiles veiled,
All these he keenly examined
And then on an old divan sat.
The pheasants two winged and chirped
And laughed in mirth and merry notes,
Busy the while building a nest,
This he eyed. The pheasants spake.

- விடுவிடு விடுவிடு என்னது அந்தத்
தென்னையை விட்டுத் தேடித் தேடி
பாழ்மனை இதற்குள் பதுங்கிட வோநீ
அழைத்து வந்தாய்? அந்தத் தென்னையில்
ஆபத் தென்ன வந்தது? விடுவிடு,

- How mad, how bad
How bad, how sad !
Is it to perch
In this ruined house
You did want me
The cocoa to quit ?
What perils felt thou
on the Cocoa there ?
How mad, how bad ?

- ஆமடி பெண்ணே அதோபார் மூலையில்
ஆணவத் தோடு அமர்ந்திருக் கின்றான்
அவன் இனிமேலே அரண்மனை எஜமான்
வெட்ட வெளியில் வீசிடும் தென்றலில்
கட்டிய கூட்டைக் கலைத்திடத் திட்டம்
கருத்தில் வைத்தான்-கண்ட துண்டமாய்
குடியிருந் தோமே கோணல் தென்னையைத்
தறித்திடத் தயவு தான்வைத் திட்டான்
ஆதலால் இந்த ஆபத்து வேளையில்
அவன் அரண்மனையில் அடக்கமாய் நமது
கோட்டையைக் கட்டிக் குடியிருந்
திடுவோம்.

- Yes my dearie
See, in the corner
The one that sits
Filled with pride
He eftsoons
Will lord the house
Out in the open
In buxom air
The nest we built
He means to strip
The crooked cocoa
Our dear abode
He deigns to chop
In thousand chips
So, in his mansion
In the hour of peril
We shall build
A fort to dwell

- விடுவிடு சீசீ
விடுவிடு இந்த

- How mad, how bad
Fiddle-faddle

சிறுமைக் கோரம்
சிந்தை தளர்வது?
சிட்டுக் குருவிகள்
சிந்தை மகிழ்ந்து
கட்டிய கூட்டைக்
கலைப்பது எண்ணம்
சிறந்தவர் என்றும்
செய்வதிங் கில்லை.
அப்படி இருக்க
அவன் நம் தென்னையை
வெட்டினால் அந்த
வீணனுக் குரிய
வீட்டைப் பின்னும்
விழைவதா விடுவிடு

How bad, how sad!
Is it for this
Meanness base
We must sink
And sink so low
The nobly great
Will never unrig
The nest of chits
Built in joy.
So if he mean
To cut our cocoa
Must we still
Wish to dwell
In the cad's abode?
How mad, how bad!

- ஆமடி கண்ணே
அதுவும் சரிதான்
பேறு காலத்தில்
பெடையுனை இந்த
விபத்து வேளையில்
வேறிடத் தெங்கே
அழைத்துச் செல்வதென்று
ஆலோசித்தேன்
அதோ பார் அடுக்களைக்
கதவு திறந்து
அழகியும் வந்தாள்.

- Yes oh! dearie
Oh yes, dear one
A nook of safety
For you gravid
Where else is,
So thought I.
And lo, the damsel
Unbars the kitchen door
And walks forth.

- ... ... அவன் விழிக்கின்றான்.

- ... ... Blank he stares.

- ஆம் அவள் ஏதோ அறைகின்றாளதை

- Yes, She speaks and that

- நாமும் கேட்போம். ... ...

- We shall listen ... ...

- ... ... நல்லது விடுவிடு,

- ... ... Let it be so.

(தொடரும்)

(To be continued)

---

# இளவேனில்!

கொட்டுமழை நீரின்றிக்
கோடியகார் போனவுடன்

கட்டிமகள் தைவரவும்
கடும்பனிதா னேய்ந்திடவும்

பொட்டைவய லறுவடைப்பின்
பொங்குமுளத் தாபத்தால்

நெட்டுயிர்ப்பு நெக்குவிட
நிலைகாணப் பொன்வசந்தை

வட்டவிழி முத்திறைத்த
வழியெல்லாம் காமலர்கள்

நட்டமிட மாமயில்கள்
நடைபயிலும் சோலையிலே

பட்டமரம் பூச்சொரியப்
பாவையிளம் பூங்குயிலி

கொட்டுமிசை கொப்பளித்துக்
கூவிடுமோர் இளவேனில்!



## அமுத வாக்கு

சக்தி தொழிலே அனைத்துமெனிற்
சார்ந்த நமக்குச் சஞ்சலமேன் ?
வித்தைக் கிறைவா ! கணநாதா !
மேன்மைத் தொழிலிற் பணியெனையே !






Edited and Published by its owner Sri Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Trichy-2. Annual Subscription Rs. 10